# நகரத்தார் திருமண நடைமுறை



பழ. அண்ணாமலை



கங்கை புத்தக நிலையம்

13, தீனதயாளு தெரு,
தி. நகர், சென்னை – 600 017

முதற் பதிப்பு : 1984
இரண்டாம் பதிப்பு : 1996



விலை ரூ. 18.00

தொடர்புக்கு :

பழ. அண்ணாமலை
8, நைனியப்பன் தெரு,
சென்னை – 600 001.

Laser Typeset at : LKM Computer Printers, Madras – 17
: Printed By Elangovan printers Madras - 14

# காணிக்கை

கடந்த நாற்பது ஆண்டு காலமாக
என்னை வாழவைத்தும்;
இன்னும் வாழவைத்துக்கொண்டிருக்கும்
பள்ளத்தூர் அ. மு. மு. குடும்பத்தார்க்கு
இந்த நூலைக்
காணிக்கை ஆக்குகின்றேன்.

ஆசிரியர்

பழ. பழநியப்பன்

"கற்பகச் சோலை"
1 வெள்ளையன் சாலை
கோட்டூர்புரம்
சென்னை–600 085.

## 'கை உறை'

திருமூலர் என்று ஒரு பெரியவர் கேட்பார்:

"மகட்குத் தாய்தன் மணாளனோடு ஆடிய
சுகத்தைச் சொல் என்றால் சொல்லுமாறு எங்ஙனே"?

ஒரு தாய் தன்மகளுக்குத் தன் மணாளனோடு ஆடிய சுகத்தைத் தான் சொல்ல முடியாது; ஆனால் தன் மணாளனைத் தான் மணந்த விதத்தைச் சொல்ல முடியாதா என்ன? ஒரு தாய் சொல்வதைவிட மிக அழகாக, தெளிவாக, நெஞ்சில் பதிகின்றார்ப்போல் சொல்ல உண்ணாமுலைக்கருளிய அண்ணாமலையைத் தவிர யாரால் முடியும்? நூலாசிரியரே சொல்வது போல இளைய தலைமுறையினருக்கு நம்முடைய திருமணங்களில் நிகழுகின்ற சடங்குகள், நிகழ்ச்சிகள், அவைகளுக்கு என்னென்ன பொருள்கள் தேவை, ஏன் அதைப் பயன்படுத்துகிறோம் என்பதெல்லாம் தெரிவதில்லை. அவர்கள் தெரிந்து கொள்ளவும் விரும்புவதில்லை. அவர்கள் தெரிந்து கொள்ள விரும்பாதது மட்டுமல்ல; தெரிந்து புரிந்து கொள்பவர்களும் அதிகமில்லை. இதுதான் இன்றைய நிலை. வட்டகைக்கு வட்டகை மாறுபட்டாலும், எல்லாவற்றையும் கூடுமான வரை தொகுத்து, பகுத்து, விளக்கமாக ஆசிரியர் தம் கன்னிமுயற்சியாக வெளிக்கொணருகின்ற இந்த நூல் நகரத்தார்களுக்கு ஒரு வரப்பிரசாதம்; மாமருந்து.

இப்படி ஒரு முயற்சியைச் செய்ய வேண்டும் என்று எண்ணிய ஆசிரியரையும், அதற்குத் தூண்டுகோலாய் விளங்கிப் பல்வகையாலும் உதவிய அறநிலையினரையும் எவ்வளவு பாராட்டினாலும் தகும். பகவத்யானம் என்பதை பகவனம் என்றும், நாலு நாள் சடங்கை நாணாளை என்றும், முளைப்பாலிகையை மொளப்பாரி என்றும், சுத்தமாக மருவி வழங்கி வருகின்ற இந்தக் காலத்தில், தும்பு பிடித்தலைப் படம் போட்டுக் காட்டியும், ஆலத்தி எடுப்பதை அழகுற வடித்தும் கழுத்திருவைக் கவினுறப் படம்பிடித்தும் தருவதற்கு அண்ணாமலையாரைத் தவிர யாரால் முடியும்?

இதுவரை எழுத்தில் இல்லாத ஒன்றை வடிவம் கொடுக்கின்ற போது ஏற்படுகின்ற இடர்ப்பாடுகள் அனுபவப்பட்டவர்களுக்கே எளிதில் விளங்கும். அந்த வகையில் ஆசிரியர் பெரியவர்களையும், ஆச்சிமார் களையும் எவ்வளவு சிரமங்களுக்கு இடையில் அணுகியிருப்பார், அரிய விளக்கங்கள் பெறுவதற்கு முயன்றிருப்பார் என்பது நினைந்து நினைந்து பாராட்டுதற் குரியது. நகரத்தார் சரித்திரத்தில் புதிய காலடியைப் பதித்திருக்கும் இந்த முயற்சி பாராட்டுதற்குரியது. மட்டுமல்ல; நாமெல்லாம் பின்பற்றுவதற்கும் உரிய ஒன்று "மன்னர் பின்னோர்" என்று போற்றப்பட்ட ஒரு சமுதாயம் மிகவும் பிற்பட்ட நிலையில் இன்று தள்ளப்பட்டிருப்பது நாம் அறிந்தது. இந்த நிலையில் தைரியமாக இவர் அடியெடுத்து வைத்திருப்பது நம் அகக்கண்களைத் திறக்கவேண்டும். "முறைதலைக் கொடுமைகள்" என்று ஆசிரியரே மனம்வெதும்பியிருப்பது போல அந்தக் கொடுமைகள் இந்தச் சமுதாயத்தில் இன்று புரையோடிப் போயிருந்தாலும் என்றாவது ஒரு நாள் மாற இறை திருவுளம் கொள்ளமாட்டாரா என்ன?

வேதம் என்றும், மறை நூல் என்றும் வழங்கிவரும் வழக்கத்தைவிட இதனை நடைநூல் என்று போற்றுவதே சாலச் சிறந்தது. ஏனெனில் இது நடைமுறை விளக்க நூல் மட்டுமல்ல, நடையில் நின்று ஒழுகி உயர வேண்டிய வேள்வி நூலாகும். பழக இனிய பண்பாளர், பார்வைக்கினிய காட்சியர், பழுத்த அனுபவத்தில் முதிர்ந்த கனியர் அண்ணாமலையார் பல்வளமும், பன்னலமும் பெற இறைதிரு அருளுமாக!

நம்மவர் வழக்கம் பெரியவர்களைப் பார்க்கப்போகும் போது ஒரு பழமோ, பூவோ கையுறையாகக் கொண்டு செல்வதே. இந்நூலும் ஒரு இனிய கையுறையே! இனிவரும் தலைமுறைக்கும் இனியதான விளக்கங்களை எடுத்துரைக்கும் இந்நூலைக் கையேடு என்பதைவிட நம்மவர் திருமணங்களில் ஒவ்வொருவரும் வழங்கிக் கொள்ள வேண்டிய கையுறை என்பதுதான் பொருத்தமில்லையா? அந்தக் "கையுறைக்கு" என்னுரை ஒரு கைஉறை.

ஒப்பம்: பழ. பழநியப்பன்

# முன்னுரை

மன்னர் பின்னோராகிய நம் நகரத்தார் திருமண நடைமுறைகளை பிறநாட்டு ஆய்வாளர்கள் பலர் ஆராய்ந்து எழுதிக் கொண்டிருக்கிறார்கள் என்று அறிகிறோம். நம் சமூக இளைய தலைமுறையினருக்கு, நம் திருமணங்களில் நடைபெறுகின்ற சடங்குகள், நிகழ்ச்சிகள், அவைகளுக்கு என்னென்ன பொருள்கள் தேவை, ஏன் அவற்றைப் பயன்படுத்துகிறோம் என்பதெல்லாம் தெரிவதில்லை. அவர்கள் தெரிந்து கொள்ளவும் விரும்புவதில்லை. இந்த நிலையில் ஓர் அறநிலையினர் என்னை இப்பணியை மேற்கொள்ளுமாறு பணித்தனர்.

நிகழ்ச்சிகளைக் கோவையாக எழுதுவது என்றால் மிக எளிது. நானும் மிகுந்த சிரமமில்லாமல் எழுதி முடித்திருப்பேன். ஆனால் வரலாற்று அடிப்படையில் அதுவும் விளக்கங்களுடன் எழுதுவது என்பது கடினமான செயல். அறிவு, திறமை, சமூக வரலாறு, சாத்திரத் தெளிவு, இலக்கியக் கூர்மை, சமூகப் பழக்க வழக்கங்களின் காரணம் அறிதல் முதலான தகுதிகள் எனக்குக் கொஞ்சமும் இல்லை. எனினும் பிரபல தொழிலதிபர் பள்ளத்தூர் திரு. மு.வெ. சுப்பையா அவர்களும், அவர்களுடைய சகோதரர் திரு. மு.மு. முத்தையா அவர்கள் மகன் திரு. மு.மு. முருகப்பன் அவர்களும் எனக்கு எல்லா வசதிகளும் செய்து தந்து ஊக்குவித்த காரணத்தால் "ஆண்டவன் வழி அமைக" என்று அவன்மேல் சுமையைப் போட்டுவிட்டு இப்பணியைத் தொடங்கினேன்.

செட்டி நாட்டில் பல ஊர்களில் உள்ள, வயதில் பெரியவர்கள் பலரையும், அதிலும் குறிப்பாக நம் ஆச்சிமார்களையும் அணுகி, அவர்களுடன் உரையாடித் துருவித் துருவி விளக்கங்கள் கேட்டும், சில நூல்களை முயன்று பெற்று படித்தும் அவற்றின் துணைக்கொண்டு இதனை உருவாக்கியிருக்கிறேன்.

திருமண நிகழ்ச்சிகளில் பலவற்றைக் காலத்தின் சூழ்நிலை கருதி விட்டு விட்டிருக்கிறோம். வட்டகைக்கு வட்டகை நிகழ்ச்சிகளில் சிற்சில மாறுதல்களும் இருக்கின்றன. அவைகளையெல்லாம் கூடுமானவரை விளக்கமாகவே எழுதியிருக்கிறேன்.

செய்திகளையும், வரலாறுகளையும் கோவையாகவும் வரிசை மாறாமலும் எழுதுவதற்குக் கட்டுரை இலக்கியத்தை விடக் கடித இலக்கியமே சுவையாக இருக்கும். இதற்கு வழிவகுத்துத் தந்தவர்கள் டாக்டர். மு.வ. ஆவார்கள். அவர்களைப் போன்று பேரறிஞர் அண்ணா அவர்களும், டாக்டர். கலைஞர் மு.கருணாநிதி அவர்களும் "தம்பிக்கு" என்றும், "உடன் பிறப்பே" என்றும் எழுதி வந்ததையும், வருவதையும் அடியொற்றி இந்த நூலை, கடிதங்களாகவே எழுதியுள்ளேன்.

இதில் உள்ள நிகழ்ச்சிகளையும், செய்திகளையும் சரி பார்த்துச் செம்மைப் படுத்தியவர்கள் பலர். அவர்கள் எல்லோரும் அறிவிலும் அனுபவத்திலும் வல்லவர்கள். பல செய்திகளுக்குத் துணை புரிந்தவர்கள் கோட்டையூர் புத்தகக் காவலர் திரு ரோஜா முத்தையா அவர்கள். பல சடங்குகளுக்குச் சரியான விளக்கங்கள் கூறியவர்கள் காரைக்குடி திரு. ராம.வீர. ராம. ராமசாமிச் செட்டியாரவர்களும், திரு மெ.செ.ச.மு.மெ. முத்துராமன் செட்டியார் அவர்களும், ராயவரம் திரு. அழ.நா. பெரியணன் செட்டியாரவர்களும் ஆவார்கள். அவ்வப்

போது பலவினாக்களை எழுப்பி, செம்மையாக இந்த நூலை உருவாக்க உதவியவர்கள் ராயவரம் திரு. மு.வீ. வள்ளியப்பன் அவர்கள். இவர்களுக்கெல்லாம் என் நன்றி,

இது என்னுடைய முதல் முயற்சி. உங்கள் கைகளில் தவழவிட்டிருக்கின்றேன். கொள்ளுவதும் தள்ளுவதும் உங்கள் விருப்பம். குறைகள் இருந்து சுட்டிக்காட்டினால் அடுத்த பதிப்பில் திருத்திக் கொள்வேன்.

இந்த நூலுக்கு “கையுறை” எழுதித் தந்தவர்கள் ஒரு அறிஞர். எளியன் மீது கொண்ட அன்பின் காரணத்தால் நூல் முழுதும் படித்துப் பார்த்து எழுதித் தந்த அவர்களுடைய பெரிய உள்ளத்திற்கு என்றும் நன்றியுடையவனாக இருப்பேன்.

இந்த நூலை உருவாக்கும் பணியில் என்னுடன், மனங் கோணாது தன் உழைப்பை நல்கிய என் உடன்பிறவாத தம்பி தேவகோட்டை முல்லை காந்தி ராமசாமிக்கும் என் நன்றி உரியது. இதனை மறுபதிப்பாக வெளிக்கொண்டுவரும் கங்கை புத்தக நிலையத்தினருக்கு என் நெஞ்சார்ந்த நன்றி.

இனி என்ன...? உள்ளே படியுங்கள்.

**பழ. அண்ணாமலை**
**பள்ளத்தூர்.**

## 1

**அன்புள்ள எழில் !**

நலம். நலமே விளைக!

உன் தங்கை மலர்விழியின் திருமண அழைப்பிதழும் உடன் நீ எழுதியிருந்த கடிதமும் கிடைத்தன. மிக்கமகிழ்ச்சி. திருமணத்திற்குக் கட்டாயம் வந்து நேரில் வாழ்த்த வேண்டும் என்று எழுதியிருக்கின்ற உன்னுடைய நல்ல மனதைப் புரிந்து கொள்கிறேன். ஆயினும் என்ன செய்ய? தவிர்க்க முடியாத பல வேலைகளால் வந்து வர இயலாது. தவறாக எண்ணற்க.

தம்பி! சில நாட்களுக்கு முன் என் உறவினர் ஒருவர் வீட்டுத் திருமணத்திற்குச் சென்றிருந்தேன். அங்கே அமெரிக்க நாட்டு மாணவர் ஒருவர் வந்திருந்தார். அவர் மணமகனுடன் படிப்பவராக இருக்கவேண்டும் அல்லது மணமகளின் தந்தைக்குத் தெரிந்தவராக இருக்கலாம் என்று எண்ணினேன். ஆனால் அவருடைய ஒவ்வொரு செயலும், நாம் நடத்துகின்ற சடங்குகளை எல்லாம் கவனமாகப் பார்த்து, அருகில் இருந்த ஒருவரிடம் விளக்கங்கள் கேட்டு குறித்துக் கொண்டதையும் கண்டு, அவரிடமே விசாரித்தேன். தம்பி! அவர் கூறிய பதில் என்னை வியப்பில் ஆழ்த்தியது. அவர் பிலடெல்பியா பல்கலைக்கழக மாணவர் என்றும், நகரத்தார் திருமண முறைகளை ஆய்வு செய்து, டாக்டர் பட்டத்திற்காக ஒரு ஆராய்ச்சிக் கட்டுரை எழுதுவதற்காக வந்திருப்பதாகவும் கூறினார். இதுவரை ஏறத்தாழ நம் பகுதியில் ஐம்பதுக்கும் மேற்பட்ட

திருமணங்களைப் பார்த்திருக்கின்றாராம். இன்று என் வயதை ஒத்தவர்களுக்கே நம் திருமணத்தில் என்னென்ன சடங்குகள், யார் யார் எப்போது செய்கிறோம் என்றும், என்னென்ன பொருள்கள் தேவை, அவைகளை ஏன் பயன்படுத்த வேண்டும் என்றெல்லாம் தெரியாதபோது, உன்னைப் போன்ற இளைய தலைமுறையினருக்கு எப்படித் தெரியமுடியும்? இந்த எண்ணம் கடந்த சில கிழமைகளாக என் உள்ளத்தை உறுத்திக்கொண்டே இருந்தது. ஏன் நாமும் ஒன்று எழுதக்கூடாது என்று எண்ணினேன். நம் இனத்துப் பெரியவர்களையும், அதிலும் குறிப்பாகப் பல ஆச்சிமார்களையும் அணுகி, உரையாடி, அவர்களிடம் துருவித் துருவி விளக்கங்கள் கேட்டு, ஒவ்வொருவரிடமும் ஒவ்வொரு செய்தியாகப் பெற்றும், பல நூல்களை முயன்று பெற்றுப் படித்தும் எழுதியுள்ளேன். கூடுமானவரை எல்லாச் சடங்குகளையும் வரிசைக்கிரமமாகவே தந்திருக் கிறேன். நம்மவர்கள் திருமணத்தைப் பற்றி அறிந்து கொள்ளவும், பல காலமாகக் கையாண்டு வந்த திருமண முறையின் உட்கருத்தைப் புரிந்துகொண்டு, மணவிழாவை நல்ல முறையில், இன்னொருவரைக் கேட்டு எதையும் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற தேவை இல்லாமல், தானே, தக்க முறையில் ஏற்பாடு செய்து நிறைவாக நடத்திக் கொள்ள ஏதுவான முறையில் இதனை எழுதுகிறேன்.

தம்பி! திருமணம் என்றால் என்ன? ஒரு வயது வந்த ஆணையும் பெண்ணையும் இணைத்து வைக்கின்ற செயல்தான் என்று எண்ணிக் கொண்டிருக்கிறோம். ஒத்த வயதுடைய அறிவுடைய ஆணும் பெண்ணும், உயிர், உடல், உணர்வு இம்மூன்றிலும் ஒன்று பட்டுக் கலந்து வாழும் அன்பு வாழ்க்கைக்கு உரிமை ஏற்படுத்திக் கொடுக்கும் நிகழ்ச்சியே திருமணம் என்பதாகும். தொல்காப்பிய உரையில் இளம்பூரணரும், இறையனார் களவியல் உரையாளரும் எட்டு வகையான திருமணங்களைப் பற்றிக்

கூறுகின்றனர். அவை: பிரமம், பிரஜாபத்தியம், ஆரிடம், தெய்வதம், காந்தர்வம், அசுரம், இராக்கதம், பைசாசம் என்பன. இவைகளுள் முதல் நான்கினை பெருந்திணை என்றும் காந்தர்வத்தைக் களவென்றும் பின் மூன்றினைக் கைக்கிளை என்றும் தமிழ் நூல்கள் கூறுகின்றன. இவற்றில் பிரமம், அசுரம், காந்தர்வம், பைசாசம் என்ற நான்கு மட்டுமே சிறப்பானவை.

பிரமம்: கன்னிகை நன்கு அலங்கரிக்கப் பெற்று, வேதம் ஓதி, நற்குணங்களுடன் கூடிய யுவனுக்கு, அவள் தகப்பனால் கன்னிகாதானமாகக் கொடுப்பது.

அசுரம்: மணமகன், மணமகளுக்கும் அவளுடைய பெற்றோர்களுக்கும் பொருள் கொடுத்து அவளை மணம் செய்து கொள்வது.

காந்தர்வம்: ஆணும் பெண்ணும் வேறெவரும் அறியாமல் காதல் மணம் புரிந்து கொள்வது.

பைசாசம்: பெண் சுய நினைவு இல்லாமல் இருக்கும் போது, பலவந்தப் புணர்ச்சி செய்து, பின்னர் அவளையே மணப்பது.

இந்த நான்குவகைத் திருமணங்களில் பிரமம் என்ற வகையே சாஸ்திர சம்மதம் பெற்றது என்று கற்றறிந்தோர் கூறுகின்றனர்.

பண்டைக் காலத்தில் நாகரிகமற்ற பிரதேசங்களில் திருமணம் என்ற ஒழுங்கு கிடையாது. ஆண்களோடு பெண் கள் கட்டுப்பாடு இல்லாமல் பழகி வந்தனர். பின்னர்தான் மனைவி என்ற பாகுபாடு ஏற்பட்டது. சமூகக் கட்டுப்பாடு களுக்குள் அடங்கியது. இதை அனுசரித்தே ஒரு கணவன், ஒரு மனைவி என்ற கட்டுப்பாடு உண்டாயிற்று. குடும்ப வாழ்க்கை எல்லா சமூகங்களிலும் இன்றியமையாததாக

உள்ளது. குடும்ப வாழ்க்கையினால் உறவின் முறை, வம்ச வழி, சொத்துரிமை முதலிய தொடர்புகள் உண்டாகின்றன.

ஒரு ஆணும் ஒரு பெண்ணும் சமூக வழக்கங்களுக்கும், சமய விதிகளுக்கும் உடன்பட்டு நிலையான வாழ்க்கையைத் தொடங்குவதே திருமணமாகும். ஒருத்தி அல்லது ஒருவனுடைய வாழ்நாளில் ஏற்படும் மிகப் பெரிய பேறுகளில் திருமணமும் ஒன்றாகும். திருமணம் என்பது பருவத்தின் கிளர்ச்சியால் ஏற்படும் உணர்வுகளுக்குத் தீனி போடும் செயலாகாது. வாழ்நாள் முழுவதும் இன்பம், துன்பம் இரண்டிலும் சரிசமமாகப் பங்கு கொண்டு வாழ்க்கையின் அறநெறியைத் தொடங்கும் முதல் பணியே திருமணம் என்பதாகும். அத்துடன் திருமணம் என்பது வாழ்க்கையின் முழுத் தத்துவத்தையும் கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்றறியும் பெரும் பயனுடையது. இதனால்தான் இந்நிகழ்ச்சியை இறைவன் இன்ப உணர்வோடு ஏற்படுத்தியுள்ளார் என்று நினைக்க வேண்டியிருக்கிறது.

கல்வி, செல்வம், ஒழுக்கம், அறிவு, இவை நான்கினால் ஒருவன் தன்னைத் தயார் செய்து கொண்டபின், நல்லவள் ஒருத்தியுடன் இன்பந்துய்த்து இல்லறம் நடத்துவதே இல்வாழ்க்கை என்று பெரியவர்கள் கூறுகிறார்கள். ஒரு ஆடவனும் ஒரு பெண்ணும் ஊரார் அறிய, உறவினர்கள் தெரிந்து கொள்ள, கணவன் மனைவியாக அறிமுகப்படுத்தப்படுகின்ற நிகழ்ச்சியே திருமண விழாவாகும். இஸ்லாம் போன்ற சில சமயத்தவரிடம் திருமணம் ஒரு ஒப்பந்தமாகக் கருதப்படுகின்றது. ஆயினும் இந்துக்களிடையே திருமணம் சமயச் சடங்குகளால் கட்டுப்பட்டதாக இருக்கிறது. எல்லாச் சமூகங்களிலும் திருமணத்திற்குப் பலவகையான விலக்குகள் அளிக்கப்பட்டிருக்கின்றன. உலகில் எல்லாச்

சமூகங்களிலும் சகோதரன் சகோதரியை மணப்பது விலக்கப்பட்டிருக்கிறது. ஒரு பிரிவு அல்லது ஒரு கோத்திரத்து மக்கள் நெருங்கிய ரத்தக் கலப்புடையவர்கள் என்பதால் இவர்களிடையேயும் மணவிலக்கு உண்டு. இதன் பயனாக ஒரு கோத்திரத்தார் மற்றொரு கோத்திரத்தின ரிடம்தான் - கொள்வதும் கொடுப்பதும் செய்து கொள்ள வேண்டும்.

இன்று நம் நாட்டில் ச.ாதிக்கு ஒரு முறையும் வீதிக்கு ஒரு வழக்கமுமாகத் திருமணங்கள் நிகழ்வதை நீ பார்த்திருக்கலாம். நம்மவர்கள் திருமணத்தில், சடங்குகளும் சம்பிரதாயங்களும் எந்தவிதக் காரணமும் இல்லாமல் நடந்ததாகத் தெரியவில்லை. இவைகளைப்பற்றி எழுதுவதற்கு, திருமணத்திற்கு முன், திருமணத்தன்று, திருமணத்திற்குப் பின் என்று மூன்று பகுதிகளாகப் பிரித்துக் கொண்டு எழுதுகின்றேன்.

தம்பி. கடிதம் நீண்டதாக இருக்கிறதே என்று கவலைப் படாதே. அடுத்த கடிதம் இன்னும் சுவையாக. செய்திகள் நிறைந்துள்ளதாக இருக்கும்.

அன்புடன்

**அண்ணாமலை**

# 2

அன்புள்ள எழில் !

நலம், நலமே விளைக.

நேற்றைய என்னுடைய கடிதத்தைத் தொடர்ந்து இதனை எழுதுகிறேன். திருமணத்திற்கு முன் நாம் செய்ய வேண்டியது என்ன? கொஞ்சம் விரிவாகவே எழுதுவேன்.

தம்பி! நம்மவர்களில் முற்காலத்தில் குடியேறிய பழக்க வழக்கங்களினால் வயதையோ, வளர்ச்சியையோ கருதாமல் பால்யத் திருமணங்கள் நடைபெற்று வந்திருக்கின்றன. உறவு முறை மாறிப் போகாமலும், சொத்துகள் கைமாறிவிடாமல் பாதுகாக்கவும், தங்கள் ஆயுட்காலத்திலேயே தங்கள் குழந்தைகளுக்கு திருமணம் செய்து பார்க்க வேண்டும் என்ற அவாவினாலும், திருமணம் என்றால் என்ன என்றே தெரிந்து கொள்ள முடியாத சின்னஞ் சிறுர்களுக்குத் திருமணம் செய்து வைத்தனர். காலம் கனியக் கனிய இப்போது இந்த நிலை மாறிவிட்டது.

"பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டோடு
உறுப நிறுத்தக் காம வாயில்
முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே"

என்ற தொல்காப்பியச் செய்யுளிலிருந்து, நல்ல குடிப்பிறப்பு, வயது, கற்பு, உணர்வு, ஆண்மை, அழகு, கனிவு, செல்வம் ஆகிய எண்வகை நிறைகளையும், ஆராய்ந்து ஒரு குடும்பத்தை நடத்திச் செல்லத் தேவையான பொருளாதார வளமும், உலக அறிவும், இன்பத்தில் திளைக்கவல்ல

பக்குவம் முதலிய தகுதிகளைத் தங்கள் குழந்தைகள் பெற்று விட்டனர் என்று அறிந்தபிறகே பெற்றோர் மணம் பேசத் தொடங்க வேண்டும்.

வயது, பருவ வளர்ச்சி, தன் கணவன் ஈட்டுகின்ற பொருளைப் பேணிக் காப்பாற்றக்கூடிய தகுதி, சகிப்புத் தன்மை, நாவடக்கம், புகுந்தவீட்டுப் பெருமையைக் கட்டிக் காத்தல், பொறுப்பு, கணவனுக்கு ஏற்படும் இன்ப துன்பங்களில் இதமாகப் பேசி யோசனை கூறும் சாமர்த்தியம், தெய்வ நம்பிக்கை, குடும்பத்தை வழிநடத்தும் பண்பு, ஒருபொழுதும் வீணாக்காமல் வீட்டுக் கடமைகளை ஆற்றும் பக்குவம், அறுசுவையுடன் கூடிய உணவினைப் படைக்கும் அன்பு, கணவன் தன்னை விரும்புகின்ற முறைக்கு எல்லாக் கோணங்களிலும் இன்பம் தந்து மகிழ் விக்கின்ற குணநலன் உள்ள பெண்ணா என்று பையனுடைய பெற்றோர், தக்கார் ஒருவர் மூலம் விசாரித்துத் தெரிந்துகொள்ள வேண்டும். வயது, ஆண்மையான வளர்ச்சி, தானாகப் பொருள் ஈட்டும் தகைமை, சகிப்புத் தன்மை, குடும்பத்திலும் தொழிலிலும் பொறுப்பு, எந்தத் துன்பச் சூழ்நிலையிலும் தன்னம்பிக்கையுடன் செயலாற்றும் தகுதி, மனைவி என்னும் இன்ப வீணையை எல்லாக் கோணங்களிலும் மீட்டி இன்பம் துய்க்கின்ற திறன் முதலிய குண நலன்கள் உடைய பையனா என்று அவர்களுடன் நெருங்கிய சான்றோர்கள் மூலம் கேட்டுத் தெரிந்து தெளிவு பெற்றபின், நடு மனிதர் மூலமாக தன் பெண்ணை இந்தப் பையனுக்குத் திருமணம் செய்துவைக்க விரும்புவதாகவும், இன்னின்ன வகைகளில் சீர் செய்ய முடியும் என்று சொல்லியனுப்ப வேண்டும்.

தம்பி! இங்கே நம் இனத்தவர்களின் சீர் முறைகளையும் முறைச்சிட்டை, முதல் பலகாரம், மறு பலகாரம் முதலியவைகள் பற்றிக் குறிப்பிட விரும்பவில்லை. என்னுடைய இந்தக் கடிதங்கள் நம்

திருமண நடைமுறைகளைப் பற்றியதாகத்தான் இருக்கும். மேலும் உன் குழந்தைகள் திருமண வயதுக்கு வரும் காலத்தில் பெரும்பாலும் முதுகை முறிக்கின்ற இந்த முறைதலைக் கொடுமைகள் முற்றும் நீங்கிவிடும் என்ற நம்பிக்கையில் இருக்கின்றேன்.

நடுமனிதர் மூலம் சொல்லியனுப்பி, அவர்களும் இசைவு தந்த பின்னர், பையன் வீட்டார் பெண் வீட்டிலோ அல்லது கோயில் போன்ற பொது இடங்களிலோ சென்று பெண்ணைப் பார்த்துவர வேண்டும். இருவரின் பெற்றோர்களும், நான் மேலே எழுதியிருக்கின்ற குணநலன்கள் திருமணம் செய்து கொள்ள இருக்கின்ற பையனுக்கும், பெண்ணுக்கும் அமைந்திருக்கின்றனவா என்று ஆராய்ந்து அறிந்து கொள்ள வேண்டும். பெண்ணைப் பார்த்து வந்ததும், பையனுடைய பெற்றோர் அவனுடைய சம்மதத்தைக் கேட்டறிய வேண்டும். பெற்றோர்களுடைய கட்டாயத்திற்காகவோ அல்லது பிறருடைய தூண்டுதலுக்காகவோ திருமணத்திற்கு ஒப்புக் கொண்டு, பிறகு வாழ்க்கையில் ஏற்படும் சிக்கல்களால் கணவன் மனைவி தனித்து வாழுகின்ற பரிதாபம் நம் இனத்தில் மலிந்து கிடப்பதை நீ அறிவாய். இத்தகைய கேடுகளைத் தவிர்ப்பதற்காகவே பையனுடைய முழுச் சம்மதத்தையும் பெற்றோர்கள் கேட்டறிய வேண்டும். மேற்கூறிய தகுதிகளில் ஏதேனும் குறைவாகத் தெரிவதாகப் பையனோ அல்லது பெண்ணோ எண்ணினால் தங்கள் பெற்றோர்களிடம் மனம் விட்டு சொல்லக்கூடிய உரிமை அவர்களுக்கு உண்டு. இத்தகைய எடுத்துச் சொல்கின்ற உரிமை பெற்றால் எல்லாத் திருமணங்களுமே நல்ல முறையில் நிகழ்ந்து, மகிழ்ச்சியான இல்வாழ்க்கை அமையும். இரு தரப்பாரும் ஒப்புக்கொண்ட பின்னர், ஒரு நல்லநாள் பார்த்துப் பேசி, உறுதி செய்துகொள்ள வேண்டும்.

**பேசி முடித்துக் கொள்ளுதல்:**

இது திருமணத்தை உறுதி செய்து கொள்ளும் நிகழ்ச்சியே. நகரத்தார்கள் திருமணம் நிச்சயிக்கின்ற நாளைத்தான் பேசி முடித்துக் கொள்வது என்று சொல்வார்கள். இளங்கோ அடிகள் தன்னுடைய சிலப்பதிகாரக் காவியத்தில் மங்கல வாழ்த்துப் பாடலில்.

"இருபெருங் குரவரும் ஒருபெரும் நாளில்
மணவணி காண மகிழ்ந்தனர்"

என்று குறிப்பிடுவதை உற்று நோக்குக. இந்த நிகழ்ச்சி மணமகள் வீட்டில்தான் நடைபெறும். குறிப்பிட்ட தினத் தன்று பையனுடைய பெற்றோர்கள் தங்கள் உற்றார் உறவினருடன் (7, 11, 16 நபர்கள்) பெண் வீட்டிற்கு வருவார்கள். அவர்களை இன்முகம் கொண்டு சந்தனம், பன்னீர் கொடுத்து வரவேற்பார்கள். பையனுடைய பெற்றோர்கள், விரளி மஞ்சள், வெத்திலை பாக்கு, கற்கண்டு பழம் முதலியன அவர்கள் தகுதிக்கேற்ப, அல்லது ஏற்கெனவே பேசிக் கொண்டபடி கொண்டு வருவார்கள். பிறகு திருமணம் பேசிக் கொண்ட விவரங்களை இன்னார் மகனுக்கு இன்னார் மகளைத் திருமணம் செய்வதாகவும், இன்னின்ன முறைகள் பெண் வீட்டாரும் பையன் வீட்டாரும் செய்வது என்று எழுதி, இரண்டு பிரதிகள் எடுத்து, ஒரு தாம்பாளத்தில் மலர், வெத்திலை பாக்கு, மஞ்சள் முதலியன வைத்து, திருமணங்கள் பேசிக்கொண்ட விவரங்களடங்கிய பிரதி ஒன்றை வைத்து பெண்வீட்டுப் பெரியவர் ஒருவர், பையன் வீட்டுப் பெரியவரிடம் கொடுப்பார்கள். அது போல பையன் வீட்டுப் பெரியவரும் பெண் வீட்டுப் பெரியவரிடம் கொடுப்பார்கள். பிறகு வந்திருக்கின்ற அனைவருக்கும் சிற்றுண்டி அளித்ததும், பிள்ளை வீட்டார் பெண்வீட்டாரிடம் சொல்லிக் கொண்டு

செல்லும் போது அவர்களை கௌரவிப்பதற்காக பழம், வெத்திலை பாக்கு ரொக்கம் முதலியன அவர்கள் தகுதிக்கேற்பக் கொடுத்து, வழியனுப்புவார்கள்.

தம்பி! இங்கே நம்மவர்கள் வயதுக்கு மதிப்புக் கொடுக்கும் பண்பாடு பற்றிச்சொல்ல விரும்புகிறேன். ஏறத்தாழ எந்தச் சமூகத்திலும் இல்லாத இந்த நல்ல பண்பாடு நம் சமூகத்தில் இன்றுவரை இருக்கிறது என்று உறுதியாகச் சொல்வேன். திருமணம் செய்து கொள்ளவிருக்கும் பையனின் தந்தை, கால ஓட்டத்தை அனுசரித்துப் பெரும் பொருள் ஈட்டி, மிகப் பெரிய அந்தஸ்தில் உள்ளவராக இருப்பார். ஆனால், விதியின் கொடுமையால் கைப்பொருளையும் இழந்துவிட்ட நிலையில் அவருக்கு ஒரு தமையனாரும் இருப்பார். திருமணம் பேசி உறுதி செய்து கொண்டு வெத்திலை பாக்கு மாற்றிக் கொள்ளும்போது, எவ்வளவு பணமும் அந்தஸ்தும் உள்ளவராக இருந்தாலும், வசதியிலும் வருவாயிலும் குறைவாக உள்ள, ஆனால் வயதில் தன்னிலும் பெரியவராகிய தன் தமையனாரையே வாங்கி, கொடுக்கும்படி சொல்வதுதான் நம்மவர்கள் பழக்கம். இதே போலத்தான் கோயில்களில் நடைபெறுகின்ற அபிஷேக ஆராதனைகளின் போது, அது யார் நடத்தினாலும் கூட, முதல் விபூதி பிரசாதம், வயதில் பெரியவர்கள் யார் என்று பார்த்துத்தான் வாங்கிக் கொள்வார்கள். வயதில் குறைந்த வர்கள் எவ்வளவுதான் செல்வம் படைத்திருந்த போதிலும் முதலில் சென்று வாங்கிக்கொள்ள மாட்டார்கள். எனக்குத் தெரிந்தவரை இந்தப் பண்பாடும் கட்டுப்பாடும் நம் சமூகத்தில் மட்டுந்தான் இருக்கிறது என்று நினைக்கிறேன்.

நாம் நடத்துகின்ற இந்தப் 'பேசி முடித்துக் கொள்ளும்' நிகழ்ச்சியைத்தான் பிற சமூகத்தினர் "பரிசம் போடுதல்"

என்று அழைக்கின்றனர். பெரும்பாலான குடும்பங்களில் பெண்ணுக்குப் பரிசம் அளிப்பதுதான் வழக்கம். பெண்ணின் குடும்பத்திற்கு பாத்திரம், ஆடை, நாணயம் முதலியவைகளைத் தனித்தோ அல்லது ஒவ்வொன்றில் இவ்வளவு என்றோ கொடுப்பது வழக்கம். பரிசம் என்பது பெண் தன் வீட்டை விட்டுப் போவதினால் ஏற்படும் நட்டத்திற்கு ஈடாகக் கருதப்படுமே அல்லாது பெண்ணை விலைக்கு வாங்குவதாகக் கருதப்பட மாட்டாது. முக்கியமாக பரிசத்தில் பெண்ணுக்கு ஆடைகளைப் பரிசளிப்பதே வழக்கம். இதனைக் கருத்தில் கொண்டுதான் நம் சமூகத்தில் பெண்ணுக்குச் சேலை, சீப்பு, கண்ணாடி முதலிய பொருள்களைப் பரிசாக அளிக்கிறோம். பேசி முடித்துக் கொண்ட பின், ஒரு நல்ல நாளில் கழுத்துருவுக்குப் பொன் கொடுக்கின்ற நிகழ்ச்சி நடைபெறும். இதுபற்றி அடுத்த கடிதத்தில் எழுதுகிறேன்.

தம்பி! கழுத்திர் என்று நம்மவர்களால் சொல்லப்படுகின்ற இந்தப் பெரிய தாலி ஒரு மருவிய சொல். சிலர் இதனை கழுத்து உரு என்றும் சிலர் இதனைக் கழுத்துத் திரு என்றும் கூறுகின்றனர். கம்பராமாயணத்தில் "கழுத்துத் திரு" என்ற சொல் கையாளப் பட்டிருக்கின்றது. ஆய்வாளர்கள் இதுபற்றி எழுதினால் பயனுடையதாக இருக்கும். எப்படி இருந்தாலும் நான் இதைக் 'கழுத்து உரு" என்றே எழுதுகின்றேன்.

கடிதங்கள் வந்து சேர்ந்த விவரமும், அவை உனக்குச் சுவையான செய்திகளைத் தருகின்றனவா என்ற விபரமும் எழுது.

அன்புடன்

அண.

## 3

**அன்புள்ள எழில்!**

நலம். நலமே விளைக!

என்னுடைய முந்திய கடிதத்தில் கழுத்துருவிற்குப் பொன் கொடுத்தல் பற்றி எழுதுவதாகக் குறிப்பிட்டிருந்தேன்.

**கழுத்து உருவிற்குப் பொன் கொடுத்தல்:**

தம்பி! மணமகளுக்குச் செய்கின்ற அணிகலன்களில் தலையாயது இந்தக் 'கழுத்து உரு' என்று சொல்லப்பெறுகின்ற பெரிய தாலிதான். கழுத்து உரு என்பதற்கு அகராதியில் திருமாங்கல்யத்துடன் கோர்க்கும் பல வகையான உருக்கள் என்றுதான் குறிப்பிட்டு இருக்கிறார்கள். திருமண நிகழ்ச்சிகளில் தாலி அணிவித்தல் என்பது மிக உயரிய நிகழ்ச்சியாகும். தாலி என்பது,

"புலிப்பல் கோர்த்த புலம்பு மணத்தாலி
கற்கெழு சிறுகுடிக் கானவன் மகனே"

என்ற அகநானூற்றுப் பாடலால் தமிழர்களுடைய வாழ்க்கையில் நீண்ட நெடுங்காலமாகவே வழங்கிவந்த ஒன்றாகக் கருத வேண்டியிருக்கிறது. ஆயினும் 10ஆம் நூற்றாண்டுக்குப் பிறகுதான் திருமண நிகழ்ச்சியில் "திருமங்கல நாண் பூட்டுதல்," "திருப்பூட்டுதல்" என்னும் உயர்ந்த தகுதியைப் பெற்றுள்ளதாக ஆராய்ச்சியாளர்கள் எழுதுகிறார்கள்.

குறிஞ்சி நில மக்கள் வீரம் செறிந்தவர்கள் என்ற சின்னமாகப் புலியின் பற்களையும், நகங்களையும் அணிந்திருந்தனர் என்று சரித்திரக் குறிப்புகள் சொல்கின்றன. பின்னர் காலம் மாற மாற இதுவே மங்கலச் சின்னமாக உருமாறியிருக்க வேண்டும். இப்போது நாம் செய்கின்ற கழுத்து உரு மொத்தம் 34 உருப்படிகள் கொண்டதாக இருக்கும். இதை இரட்டை வடமாகக் கோர்த்து இருப்பார்கள். நடுவில் செல்வச் செழிப்பிற்கும் மங்கல வாழ்விற்கும் உரிய தெய்வமாகிய மகாலெட்சுமியின் உருவம் பொறித்த திருமாங்கல்யம் இருக்கும். புலிப்பாதங்கள் போல ஐந்து உருப்படிகள். இவைகளை சில வட்டகைகளில் ஏத்தனம் என்றும் சில வட்டகைகளில் ஏனாதி என்றும் கூறி வருகிறோம். இந்தக் கழுத்துருவை அழகான முறையில் கோர்த்து அலங்கரிப்பதற்காக சரிமணியும், கழுத்து உருவின் கடைசிப் பகுதியில் அவைகள் உருவி வந்துவிடாமல் இருப்பதற்காக கடைமணி யும், வாழ்க்கையில் மணமக்கள் புகழ், கல்வி, வலிமை, வெற்றி, நன்மக்கள், பொன், நெல், நல்வினை, நுகர்ச்சி, அறிவு, அழகு, பொறுமை, இளமை, துணிபு, நோயின்மை, வாழ்நாள் ஆகிய எல்லாப் பேறுகளும் பெற்று வாழவேண்டும் என்பதை குறிப்பதற்காகவும், தங்கள் குல தெய்வத்திற்கு என்று ஒன்றும் சேர்த்து ஆகப்பத்தொன்பது உருக்களும் இருக்கும். திருமணம் முடிந்து குழந்தைப் பேறு பெற்றதும் குலதெய்வத்திற்குப் படையல் நடக்கும்போது இந்த உருவில் ஒன்றைக் காணிக்கையாகக் கொடுத்து வருவது இன்னும் சில வட்டகைகளில் நடைமுறையாக இருந்துவருகிறது. இவை நீங்கலாக குச்சி, தும்பு, துவாளை என்று மூன்று உருப்படிகளையும் மணமகன் வீட்டுப் பெரியவர்களில் யாரேனும் கழுத்து உருவில் கோர்த்து வைப்பார்கள். சில வட்டகைகளில் மணமகள் தாய்மைப் பேறு அடைந்ததும் கோர்த்து வைக்கின்ற பழக்கம் இருந்து

வருகிறது. எப்படியும் இந்த குச்சி, தும்பு, துவாளை மூன்று உருப்படிகளையும் மணமகளின் கன்னித் தன்மை கழிந்த பிறகு தான் கோர்க்கிறார்கள் என்பதை உற்று நோக்குக. இந்தக் கழுத்து உரு கோர்க்கின்ற விவரத்தையும் எப்போது கோர்ப்பார்கள் என்பதையும் விளக்கமாகப் பிறிதொரு கடிதத்தில் எழுதுவேன். இப்போது இந்த நிகழ்ச்சியை மட்டுமே விளக்கமாக எழுதுகிறேன்.

தம்பி! கழுத்து உரு என்பது மணமகள் வீட்டார் செய்ய வேண்டிய அணிகலன்களில் ஒன்று. ஆயினும் மணமகன் வீட்டாருடைய தாலிதான் அணிவிக்கப்பட வேண்டும் என்ற பழக்கத்தின் காரணமாக அவர்களுடைய பொன்னும் இந்தப் பெரிய தாலியில் சேர்ந்திருக்க வேண்டும் என்ற எண்ணத்தில் ஒரு குறிப்பிட்ட நல்ல நாளில் மணமகன் வீட்டிலிருந்து இருவர் பொன், சந்தனம், குங்குமம், மலர், வெத்திலை, பாக்கு, தேங்காய் முதலியவை களைக் கொண்டு வருவார்கள். மணமகள் வீட்டில் அவர்களுடைய பங்காளிகள், உறவினர்கள், நண்பர்கள் முன்னிலையில் பொற்கொல்லர் ஒருவர் வந்து அவர்கள் தருகின்ற பொன்னை வாங்கித் தட்டிக் கொடுப்பார். பின்னர் அந்தப் பொற்கொல்லருக்குத் தகுந்த மரியாதைகள் செய்து அனுப்பிவைப்பார்கள். பெரும்பாலும் இந்தக் கழுத்து உரு செய்வதற்கு நீண்ட நாட்கள் ஆகும் என்பதால் முன் கூட்டியே அவரவர்கள் தகுதிக்கும் சக்திக்கும் ஏற்ப செய்து வைத்துவிடுவதை நாம் வழக்கமாகக் கொண்டிருக் கிறோம். பழைய நாட்களில் பொற்கொல்லர் வந்து பொன் தட்டிய பிறகே கழுத்து உரு உருவாக்கம் பெறும். இன்றையச் சூழ்நிலையில், கால ஓட்டத்திற்கும் விரையத்திற்கும் ஈடு கொடுப்பதற்காகவும், பொருளாதாரச் சிக்கனத்தை முன்னிட்டும் முன்கூட்டியே செய்து வைத்திருந்தாலும், மணமகன் வீட்டாருடைய பொன்னும் இதில் சேர்ந்திருக்க வேண்டும் என்று கருதியே இந்த நிகழ்ச்சியை நடத்தி

வருகிறோம். இந்த நிகழ்ச்சி இப்போதெல்லாம் திருமணத்தன்று காலையில்கூட நடைபெறுகின்றது. காரணம் காலந்தான். இந்த நிகழ்ச்சிக்கு முன்பே ஒரு நல்ல நாள் பார்த்து "முகூர்த்தக் கால்" ஊன்றிக் கல்யாணம் சொல்வார்கள்.

**முகூர்த்தக் கால் ஊன்றுதல்:**

தம்பி! இந்த நிகழ்ச்சி. பெரும்பாலும் திருமணத்திற்கு ஒரு வாரம் முன்னர்தான் நடைபெறும். இது மணமகன், மணமகள் இருவருடைய வீடுகளிலும் நடைபெறவேண்டிய நிகழ்ச்சி. ஒரு நல்ல நாளில், குறிப்பிட்ட நல்ல நேரத்தில் கொட்டகை போடுபவர் ஒருவர்வந்து, வீட்டின் நடுவாசலில் ஈசானிய மூலையில், மஞ்சள் தடவிய ஒரு மூங்கில் கழியின் முனையில், மாவிலை கட்டி ஊன்றிவைப்பார். பிறகு அதற்குத் தேங்காய் உடைத்து கற்பூர தீபம் காட்டுவார். ஈசானிய மூலை என்பது வட கிழக்கில் உள்ள மூலை. திசைகளை எட்டாகப் பிரித்தவர்கள் ஒவ்வொரு திசைக்கும் ஒவ்வொரு தெய்வத்தை அதிபதியாகக் குறிப்பிட்டனர். அதில் வடகிழக்கிற்குரிய அதிபதி ஈஸ்வரன். எனவேதான் இதனை ஈசானிய மூலை என்று அழைக்கிறோம். இங்ஙனம் முகூர்த்தக்கால் ஊன்றிய பிறகு இரு வீட்டாரும் திருமணச் சடங்குகள் எல்லாம் முடிந்து, காய்ச்சி ஊற்றிக் கொள்ளும் வரை எந்தவிதமான துக்க நிகழ்ச்சிகளிலும் பங்கு கொள்ளக் கூடாது. முகூர்த்தக்கால் ஊன்றியபிறகு 'கல்யாணம் சொல்லுதல்' என்ற நிகழ்ச்சி நடைபெறும்.

கல்யாணம் சொல்லுதல்: தம்பி! இதுவும் இருவீட்டாரும் செய்ய வேண்டிய நிகழ்ச்சியே. மணமக்களின் தந்தையர் அவர்களுடைய பெற்றோர்களைத் திருமணத்திற்கு அழைப்பது தான் இந்த நிகழ்ச்சியின் உட்பொருள். பெற்றோர்களுக்கு கொடுக்க வேண்டிய

மரியாதையும் கௌரவமும் இதன் பின்னணியில் இருப்பதை நன்றாக உற்று நோக்கினால் புலனாகும். நடு வீட்டில் கோலம் போட்டுத் தடுக்குப் போட்டு வைத்திருப்பார்கள். மணமக்களின் தந்தையர் அவரவர்கள் வீடுகளில் அந்தத் தடுக்கில் அமர்ந்து கொண்டு, தங்கள் குழந்தைக்கு இந்த நாளில் திருமணம் என்று சொல்லி "கல்யாணம் சொல்ல வேண்டும்" என்று கூறி அழைக்க வேண்டும். அவர்களுடைய பெற்றோர்களும் இதனை ஒப்புக் கொண்டதற்கு அறிகுறியாக வெத்திலை பாக்கும், ரூபாயும் கொடுப்பார்கள். இதனைத் தான் நம்மவர்கள் 'பாக்குப் பணம்' என்று சொல்கிறாார்கள். இந்த நிகழ்ச்சி முடிந்ததும் அன்றே மற்றொரு நல்ல நேரத்தில் மணமகனுக்குச் சகோதரி வீட்டிலும், ஆயாள் (தாயாருடைய தாயார்) வீட்டிலும் சென்று, இரண்டு தேங்காய், வெத்திலை பாக்கு, ரூபாய் முதலியன ஒரு ஓலைக் கொட்டானில் கொண்டுபோய் அவர்களுடைய நடுவீட்டில் வைத்து "கல்யாணம் சொல்ல வேண்டும்" என்று கூறுவார்கள். அவர்களும் திருமணத்திற்கு வருவதாக ஒப்புதல் தந்ததற்கு அடையாளமாக, பாக்குப் பணம் கொடுப்பார்கள். இதேபோல மணமகளின் அத்தை வீட்டிலும் ஆயாள் வீட்டிலும் சென்று சொல்லி வருவார்கள். அதன் பிறகுதான் அச்சாகி இருக்கும் அழைப்புகளை உற்றார், உறவினர், நண்பர்கள், சுற்றத்தார் முதலியவர்கட்கு நேரிலும் அஞ்சல் வழியாகவும் அனுப்பி வைப்பார்கள். சிலப்பதிகார காவிய மங்கல வாழ்த்துப் பாடலில்

> "யானை எருத்தத்து, அணியிழையார் மேல்இரீஇ
> மாநகர்க்கு ஈந்தார் மணம்"

என்று குறிப்பிட்டிருப்பதைப் போல சில பகுதிகளில் மண மகளுக்குத் தாயும் சகோதரியும் கழுத்து உரு அணிந்து

கொண்டும், வேறு சில பகுதிகளில் கழுத்துரு அணியாமலும் உற்றார், உறவினர், பங்காளிகள் முதலியவர்களைத் திருமணத்திற்கு அழைத்து வருவதையும், திருமணத்திற்கு முதல்நாள் சிறுவர்கள் இருவரை வீடுகளில் சென்று "கல்யாணம் சொன்னது சரிதானா" என்று கேட்கின்ற வழக்கத்தையுமே இந்த "மாநகர்க்கு ஈந்தார் மணம்" என்ற வரிகளிலிருந்து புலனாவதை அறியலாம்.

இனி அடுத்த கடிதத்தில் "பாக்கு வைத்தல்" என்ற நிகழ்ச்சி பற்றி எழுதுவேன்.

அன்புடன்,

அண

## 4

அன்புள்ள எழில்!

நலம். நலமே விளைக!

மன்னர் பின்னோராகிய தனவணிகர்களாகிய நம் நாட்டுக் கோட்டை நகரத்தார்கள் இக்காலத் திருமணங்களை மற்றவர்கள் அரசாங்க அலுவலகத்தில் பதிவு செய்வதைப் போல, அவரவர்களுடைய நகரக் கோயில்களிலும் பாக்கு வைத்துப் பதிவு செய்து கொள்வதை வழக்கமாக மேற்கொண்டு வருகிறோம். நம் நகரத்தார்கள் காவிரிப் பூம்பட்டினத்திலிருந்து பாண்டிய நாட்டில் 96 ஊர்களில் குடியேறி வாழ்ந்து வந்திருக்கிறார்கள். இந்த 96 ஊர்களில் தற்போது நம்மவர்கள் வசித்து வருகின்ற ஊர்கள் 76 தான். இப்போது வாழ்ந்து வருகின்ற ஊர்களின் பெயரையும் தந்துள்ளேன்.

1. அமராவதி புதூர்
2. அரண்மனை சிறுவயல்
3. அரிமளம்
4. அரியக்குடி
5. அலவாக் கோட்டை
6. க. அழகாபுரி
7. கொ. அழகாபுரி
8. ஆத்தங்குடி
9. ஆத்திக்காடு தெற்கூர்
10. ஆவினிப்பட்டி
11. ஓ. சிறுவயல்
12. உலகன் பட்டி
13. ஒக்கூர்
14. கடியாபட்டி
15. கண்டரமாணிக்கம்
16. கண்டவராயன்பட்டி
17. கண்டனூர்
18. கருங்குளம்
19. கல்லல்
20. கல்லுப்பட்டி
21. காரைக்குடி
22. காளையார் மங்கலம்
23. கானாடு காத்தான்
24. கீழச்சிவல் பட்டி

25. குருவிக்கொண்டான் பட்டி
26. குழிபிறை
27. கொத்தமங்கலம்
28. கொப்பனா பட்டி
29. கோட்டையூர்
30. கோனாபட்டு
31. சக்கந்தி
32. சண்முகநாதபுரம்
33. சிராவயல்
34. சிறுகூடல் பட்டி
35. செம்பனூர்
36. செக்காலை
37. செவ்வூர்
38. சொக்கநாதபுரம்
39. சொக்கலிங்கபுரம் (மதகுபட்டி)
40. சொக்கலிங்கம் புதூர்
41 சோழபுரம்
42. சொர்ணநாதபுரம் (தாணிச்சாவூரணி)*
43. தேவகோட்டை
44. தேனி பட்டி
45. நடராசபுரம்
46. நற்சாந்து பட்டி
47. நாச்சியாபுரம்
48. நாட்டரசன் கோட்டை
49. நெற்குப்பை
50. நேமத்தான் பட்டி
51. பட்ட மங்கலம்
52. பலவான்குடி
53. பள்ளத்தூர்
54. பறியா மருது பட்டி*
55. பனங்குடி
56. பனையப் பட்டி
57. பாகநேரி
58. பிள்ளையார் பட்டி
59. புதுப் பட்டி
60. புதுவயல்
61. பூங்குடி
62. பூலாங்குறிச்சி
63. பொன்னமராவதி
64. மகிபாலன் பட்டி
65. மாநகரி
66. மிதிலைப் பட்டி
67. ஆ. முத்துப்பட்டணம்
68. மேலைச்சிவபுரி
69. ராங்கியம்
70. ராயவரம்
71. கொ. லெட்சுமிபுரம்
72. நெ. லெட்சுமிபுரம்
73. வலையப் பட்டி
74. விராமதி
75. விரையாச்சிலை
76. வெற்றியூர்
77. வேகுப் பட்டி
78. வேந்தன் பட்டி

* இக்குறியிட்ட ஊர்களில் தற்போது நம்மவர்கள் ஒருவரும் வசித்துவரவில்லை என்று அறிகிறேன்.

இப்படி 96 ஊர்களில் நாம் வாழ்ந்து கொண்டிருந்தாலும் நாம் ஒன்பது பிரிவினராகப் பிரிந்து, ஒவ்வொரு பிரிவினரும் ஒவ்வொரு ஊரில் ஒரு சிவன்கோயில் அமைத்து வழிபட்டு வருகிறோம். நம் நகரத்தார்கள் பற்றிய விவரம் அனைத்தும் பிறகு விரிவாக தனியே ஒரு நூல் எழுதுவதாக எண்ணியுள்ளேன். அதில் விளக்கமாக எழுதுவேன். இருப்பினும் நம்முடைய ஒன்பது பிரிவுகள் எவையெவை, எந்தெந்த ஊர்களில் கோயில் கட்டி வழிபட்டு வருகிறோம் — அந்தக் கோயில்களில் வீற்றிருக்கும் இறைவன், இறைவி, பெயர்கள் என்னென்ன என்ற விளக்கங்கள் கீழே தந்துள்ளேன். ஒன்பது பெரும் பிரிவுகளை வகுத்துக் கொண்ட நம் நகரத்தார்கள், சில பிரிவுகளில் உட்பிரிவுகளையும் வகுத்துக் கொண்டிருக்கிறார்கள்.

### 1. இளையாற்றக்குடிக் கோயில்

*இறைவன் : கைலாச நாதர்*

*இறைவி : நித்திய கல்யாணி*

பிரிவுகள்

*(கல்வாசநாட்டில் இளையாற்றக்குடியான குலசேகர புரத்தில்)*

*1. ஒக்கூருடையார்*
*2. அரும்பார்க்கிளையாரான பட்டணசாமியார்*
*3. பெருமருதூருடையார்*
*4. கழனிவாசக் குடியார்*
*5. கிங்கிணிக்கூருடையார்*
*6. பேரசெந்தூருடையார்*
*7. சிறுசேத்தூருடையார்*

*கீழைச் சிவல் பட்டியிலிருந்து 3 கி.மீ. தொலைவில் ஆவினிப் பட்டிச் சாலையில் அமைந்துள்ளது இவ்வூர்.*

**2. மாற்றூர்க் கோயில்**

*இறைவன் : ஐந்நூற்றீசர்*

*இறைவி : பெரியநாயகி*

**பிரிவுகள்**

*(கேரளவளசிங்க நாடாகிய பிரம்பூர் நாட்டில் மாற்றூரரான் வீரபாண்டியபுரத்தில்)*

*1. உறையூருடையார்*

*2. அரும்பாக்கூருடையார்*

*3. மணலூருடையாரார்*

*4. மண்ணூருடையார்*

*5. கண்ணூருடையார்*

*6. கருப்பூருடையார்*

*7. குளத்தூருடையார்*

*காரைக்குடிக்குக் கிழக்கே 6 கி.மீ. தொலைவில் அமைந் துள்ளது இவ்வூர்.*

**3. வைரவன் கோயில்**

*இறைவன் : வளரொளிநாதர்*

*இறைவி : வடிவுடையம்மை*

**பிரிவுகள்**

*(கேரள சிங்க வளநாடாகிய ஏழகப்பெருந்திருவான வீரபாண்டிய புரத்தில்)*

*1. சிறுகுளத்தூருடையார்*

**இதில் உட்பிரிவுகள்**

*அ. பெரிய வகுப்பு*

*ஆ. தெய்யனார் வகுப்பு (தெய்வ நாயகர் வகுப்பு)*

இ. பிள்ளையார்வகுப்பு

2. கழனிவாசலுடையார்

3. மருதேந்திரபுர முடையார்

திருப்பத்தூருக்குக் கிழக்கே 5 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது இவ்வூர்.

## 4. இரணியூர்க் கோயில்

இறைவன் : ஆட்கொண்ட நாதர்

இறைவி : சிவபுரந்தேவி

(கல்வாச நாட்டில் இளையாற்றக் குடியான குலசேகர புரத்தில், இரணியூர் மருதங்குடியான ராச நாராயண புரத்தில்)

1. இரணியூர்த் திருவேட்பூருடையார்

கீழச்சிவல்பட்டிக்கு அருகே 4. கி.மீ தொலைவில் அமைந்துள்ள ஊர் இது.

## 5. பிள்ளையார்பட்டிக் கோயில்

விநாயகர் : கற்பக விநாயகர்

இறைவன் : திருவீசர்

இறைவி : சிவகாமவல்லி

இறைவன் : மருதீசர்

இறைவி : வாடாமலர் மங்கை

(கல்வாச நாட்டில் இளையாற்றக் குடியான குலசேகர புரத்தில் இரணியூர் மருதங்குடியான ராசநாராயண புரத்தில்)

1. பிள்ளையார்பட்டியான திருவேட்பூருடையார்

காரைக்குடி திருப்பத்தூர் நெடுஞ்சாலையில் குன்றைக்குடிக் கும் வைரவன்பட்டிக்கும் இடையே அமைந்துள்ளது இவ்வூர்.

### 6. நேமங் கோயில்

*இறைவன் : செயங்கொண்ட சோளேசர்*

*இறைவி : சவுந்தர நாயகி*

*(கேரளசிங்க வளநாட்டில் நேரமமாகிய குலசேகர புரத்தில்)*

*1. தேனாறு பாயும் இளநலமுடையார்*

*குன்றக்குடிக்கு அருகே கீழைச்சிவல்பட்டிக்கு செல்லும் வழியில் அமைந்துள்ளது இவ்வூர்.*

### 7. இலுப்பைக்குடிக் கோயில்

*இறைவன் : தான்தோன்றியீசர்*

*இறைவி : சவுந்தர நாயகி*

*(கேரளசிங்க வளநாடாகிய பிரம்பூர் நாட்டில்)*

*1. இலுப்பைக்குடியான புகழிடங்கொடுத்த*
*பட்டணத்தில் சூடாமணி புரமுடையார்*

*காரைக்குடிக்குக் கிழக்கே 6. கி.மீ. தொலைவில் அமைந்துள்ள ஊர் இது.*

### 8. சூரைக்குடிக் கோவில்

*இறைவன் : தேசிகநாதர்*

*இறைவி : ஆவுடைநாயகி*

*(கேரள சிங்க வளநாட்டில் சூரக்குடியான தேசிக நாராயண புரத்தில்)*

*1. புகழ்வேண்டிய பாக்கமுடையார்*

*பள்ளத்தூருக்குத் தெற்கே 3. கி.மீ தொலைவில், பூவாண்டிப் பட்டி கிராமத்திற்கு அண்மையில் உள்ளது இவ்வூர்.*

## 9. வேலங்குடிக் கோயில்

இறைவன் : கண்டீசுவரர்

இறைவி : காமாட்சியம்மை

(கேரள சிங்க வளநாடாகிய பாலையூர் நாட்டில் வேலங்குடியான தேசிக நாராயண புரத்தில்)

1. கழனிநல்லூருடையார்.

கோட்டையூருக்கு அருகே வேலங்குடியில் அமைந்துள்ளது இவ்வூர்.

குறிப்பு: 1. இசைவு பிடிமானத்தில் நகக்குறியீட்டிற்குள் கொடுத்திருக்கும் வாசகத்தை எழுதி பிறகு, பிரிவு, மணமகன் தந்தை, மணமகன் பெயர் எழுதுதல் மரபு.

(உம்) கல்வாச நாட்டில் இளையாற்றக் குடியான குலசேகரபுரத்தில் அரும்பார்க்கிளையா ரான பட்டண சாமியார் அருணாசலம் செட்டி பழநியப்பரோ, கேரள சிங்க வளநாட்டில் சூரைக்குடியான தேசிக பாக்க முடையார் வள்ளியப்ப செட்டி அருணாசலரோ அவர் மகன் அண்ணாமலை இவர் மகள் சிவகாமியை.

2. இந்த ஒன்பது நகரக்கோயில்களும் முன்பு இராமனாதபுர மாவட்டம் என்றும் தற்போது பசும்பொன் முத்துராமலிங்கர் மாவட்டம் என்றும் அழைக்கப் பெறுகின்ற மாவட்டத்தி லேயே அமைந்துள்ளன.

இந்த ஒன்பது நகரக் கோயில்களில் 4 முதல் 9 வரை உள்ள கோயில் நகரத்தார்களில் உட்பிரிவுகள் கிடையாது. இந்த ஒன்பது பிரிவினரும் தங்களுடைய பிரிவிற்குள்ளே திருமணம் செய்து கொள்வதில்லை. இளையாற்றக்குடிக்

கோவிலிலிருந்து இரணியூர்க் கோவிலாரும், பிள்ளையார் பட்டிக் கோவிலாரும் பிரிந்து வந்ததினால் அவர்கள் இருவரும் நெருங்கிய ரத்தக் கலப்புடையவர்களாக ஆகிவிடுவதால் இவர்களுக்குள் கொள்வினை, கொடுப் பினை இல்லை. ஆயினும் இளையாற்றக்குடி கோயிலாரும், மாற்றூர்க் கோயிலாரும் தங்கள் கோயில் உட்பிரிவு களுக்குள்ளேயே மணம் செய்து கொள்கின்றனர்.

திருமணத்திற்கு மூன்று நாட்களுக்கு முன்னர் இரு வீட்டாரும் அவரவர்கள் சார்ந்திருக்கின்ற கோயில்களுக்குத் தங்கள் பங்காளிகள் ஒருவரை அனுப்பி மணமகள்- மணமகன் கோயில், பிரிவு, ஊர், முகவரி, திருமணம் நடைபெறுகின்ற நாள், நேரம், இடம் முதலிய விவரங்களை கோயிலில் உள்ள பதிவேட்டில் குறித்து, அதற்குரிய காணிக்கையைச் செலுத்தி வரவேண்டும். இத்திருமணத்தை ஒப்புக் கொண்டு, கோயில் புள்ளியாகச் சேர்த்துக் கொண்டதற்கு அறிகுறியாக, திருமணத்திற்கு முதல்நாள் இரண்டு கோயில்களிலிருந்தும் அந்தந்தக் கோயில்களின் பணியாட்கள் மூலம், மாலை, விபூதி பிரசாதம் முதலியன பெண்வீட்டாரிடம் கொண்டு வந்து தருவார்கள். இப்படி நகரக் கோயில்களிலிருந்து மாலை வந்தால்தான் அந்தத் திருமணம் நகரத்தார் சமூகத்தில் செல்லுபடியாகும் என்ற வழக்கத்தை நம்மவர்கள் மேற்கொண்டிருக்கிறோம். இரணிக் கோயிலாரும், பிள்ளையார் பட்டிக் கோயிலாரும் இளையாற்றங்குடி கோவிலிலிருந்து பிரிந்து வந்ததினால் இவ்விருவரும் இளையாற்றங்குடி கோயிலில் பாக்கு வைத்த பின்னர்தான், தங்கள் தங்கள் கோயில்களில் பாக்கு வைக்க வேண்டும்.

தம்பி! கடிதம் மிக நீண்டதாக இருக்கிறதே என்று கவலைப்படுகிறாயா? சமூகப் பழக்கவழக்கங்களையும், சடங்குகளையும் அறிந்து கொள்ள விரும்பும்போது சற்று பொறுமையாகத்தான் இருக்க வேண்டும்.

இதுவரை திருமணத்திற்கு முன் செய்ய வேண்டிய நிகழ்ச்சிகள் பற்றி எழுதினேன். நாளைய எனது கடிதத்தில் திருமணத்திற்கு முதல்நாள் செய்யவேண்டிய நிகழ்ச்சிகள் பற்றி எழுதுவேன்,



அன்புடன்

அண

# 5

**அன்புள்ள எழில் !**

நலம், நலமே விளைக!

என்னுடைய முந்திய நான்கு கடிதங்களும் முறையே கிடைத்தன என்றும், செய்திகள் மிகப் பயனுடையவை களாக இருக்கின்றன என்றும், தொடர்ந்து வரும் என்னுடைய கடிதங்களை ஆவலுடன் எதிர்பார்ப்பதாகவும் எழுதிய உன் கடிதம் கிடைத்தது: மிக்க மகிழ்ச்சி.

தம்பி! திருமணத்திற்கு மூன்று நாட்களுக்கு முன்னர் அவரவர்கள் சார்ந்திருக்கின்ற நகரக் கோயில்களில் பாக்கு வைத்துத் திருமணத்தைப் பதிவு செய்து கொள்ள வேண்டும் என்று எழுதியிருந்தேன். அதேபோல, மணமக்களுடைய தந்தையோ அல்லது பங்காளிகளில் ஒருவரோ அவரவர் களுடைய சொந்த ஊரில் உள்ள நகரச் சிவன் கோயிலுக்குச் சென்று, மேளத்திற்கு எழுதி வைக்க வேண்டும். திருமணம் முடிந்தபின் மணமகனை அந்த ஊர்ப் புள்ளிகளில் ஒருவராக ஏற்றுக் கொள்ளப் பெறுவர். இப்படி நகரக் கோயிலில் மேளத்திற்கு எழுதிவைப்பதை ஏன் என்று சிந்தித்துப் பார்த்தால் ஒன்று நன்றாகப் புலனாகும். தொழில் காரணமாகவோ அல்லது வேலைகள் நிமித்தமாகவோ நம்மில் பலரும் இப்போது வெளியூர்களில் தான் வாழ்ந்து வருகிறோம். திருமண நிகழ்ச்சிகளைத் தெய்வ சம்மதத்துடன் தொடங்கினால் மணமக்கள் எல்லா நலன்களும் பெற்று வாழ வழி அமைத்துத் தரும் என்ற உயரிய நோக்கத்துடன் இதனை மேற்கொண்டிருக்கிறார்கள்

என்றே கருத வேண்டியிருக்கிறது. திருமணத்தன்று பயன்படுத்துவதற்காக மூன்று நாட்களுக்கு முன்பே முளைப் பாலிகையையும் தயார் செய்து வைத்துக் கொள்ள வேண்டும்.

## முளைப்பாலிகை

சிலப்பதிகாரத்தில் கோவலன் கண்ணகி திருமணத்தின் போது வாழ்த்துரை கூறும் பெண்களின் கைகளில்

"விரித்த பாலிகை முளைக்குட நிரையும்"

இருந்ததாக இளங்கோ அடிகள் கூறியுள்ளதை நினைவு கொள்க.

மணமகன் வீட்டில், முளைக்கும் திறனுள்ள நெல், உளுந்து, கடலை, கொள்ளு, எள், சாமை, திணை, துவரை, பயறு ஆகிய ஒன்பது வகைத் தானியங்களையும் ஒரு பானையில் போட்டு, ஊருணித் தண்ணீர் ஊற்றி வைத்து விடுவார்கள். பிறகு அந்தத் தண்ணீரை வடித்து விட்டு மீண்டும் தண்ணீர் ஊற்றி வைப்பார்கள். திருமணத்திற்கு முதல் நாள் ஒரு பாத்திரத்தில் சிகப்புத் துணி வைத்து அதில் இந்தத் தானியங்களை வைத்து இறுகக் கட்டி வைத்து விடுவார்கள். இப்படிச் செய்தால் அதில் உள்ள எல்லா தானியங்களும் முளைவிட்டு இருக்கும். இதன் நோக்கம், திருமணம் செய்து கொள்ளும் மணமக்களும் அவர்கள் குடும்பமும் முளைவிட்டுப் பல்கிப் பெருகி வாழ வேண்டும் என்பதே. சில வட்டகைகளில் ஐந்து வகைத் தானியங்கள், நெல், துவரை, கேப்பை, பயறு, பருத்தி முதலியவைகளை மேற்கூறியபடி தயார் செய்து வைத்துக் கொள்வார்கள். இந்த முளைப்பாலிகையைத்தான் நாம் "மொளப்பாரி" என்று சொல்கிறோம். திருமணத்திற்கு இரண்டொரு

தினங்களுக்கு முன், மணமகன் கால்களில் இரண்டாவது விரல்களில் வெள்ளியினாலான மோதிரம் அணிவிப்பார்கள். இல்லற வாழ்வில் ஈடுபடும் முன்னர் இளமை வாழ்வில் இருப்பவன் அணிமணிகள் அணிவதில்லை. மணமகனுக்கு அன்று அணிவிக்கப் பெறும் மோதிரம், திருமண வாழ்வில் அவனது பொறுப்புகளை உணர்த்திச் சுட்டிக்காட்டுவதாக அமைத்திருக்கிறார்கள். இனித் திருமணத்திற்கு முதல் நாள் நடைபெறும் நிகழ்ச்சிகளை எழுதுகிறேன்.

மணமக்கள் இருவர் வீடுகளிலும் அநேகமாக அழைக்கப் பெற்ற எல்லா உறவினர்களும் அவரவர்கள் வீடுகளுக்கு வந்திருப்பார்கள். நம்மில் பெரும்பாலோர் “படைப்பு” என்று நம் மூதாதையர்களை முதன்மையாக வழிபடுகின்ற நாளாக இதனை அமைத்துள்ளனர். முன்பெல்லாம் திருமணத்திற்கு முதல்நாள் எல்லோரும் கூடுகின்ற இந்த நிகழ்ச்சியைக் “கூடி ஆக்கி உண்ணுதல்” என்றே கூறி வந்திருக்கின்றனர்.

நம் சமூகத்தில் திருமணம் மணமகள் வீட்டிலேயே நடைபெறுவதால், இனி வரும் நிகழ்ச்சிகள் எல்லாம் பெண் வீட்டில் நடைபெறுவதாகக் கொள்ள வேண்டும். மணமகன் வீட்டில் முளைப்பாலிகை தயார் செய்த பின்னர், கோட்டையும் கட்டி வைத்துக் கொள்ள வேண்டும். கோட்டை என்பது 24 மரக்கால் அளவு கொண்டநெல்லை உள்ளே வைத்துக் கட்டிய வைக்கோல் புரியாகும். 24 மரக்கால், அளவு பெரியதாக இருக்கும் என்பதால் இப்போதெல்லாம் ஒரு மரக்கால் நெல்லை மட்டுமே வைத்துக் கட்டுகிறார்கள். இந்தக் கோட்டையையும், முளைப்பாலிகையையும் எங்கே பயன் படுத்துகிறோம் என்பதை பின்வரும் என்னுடைய மற்றொரு கடிதத்தில் எழுதுகிறேன்.

படைப்போ, அல்லது கூடி ஆக்கி உண்ணுகின்ற நிகழ்ச்சியோ முடிந்த பின்னர், இரவில் முதன் முதலாக நடைபெறும் நிகழ்ச்சி, "மணை போடுதல்" என்பதாகும்.

## மணை போடுதல்

பல பேறுகளும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்கின்ற மங்கலப் பெண்டிர்கள் பலரும் கூடி இதனைச் செய்வார்கள். அவர்கள் அமைக்கும் இந்த மணையில் அமர்ந்துதான் திருமண நிகழ்ச்சிகள் நடைபெறும். திருமண மக்களும் இந்த மங்கலப் பெண்டிர் போலவே எல்லாப் பேறுகளும் பெற்று வாழ வேண்டும் என்பதே இதனுடைய உட்கருத்து. கொத்தனார் ஒருவருடைய துணையுடன் இந்த மங்கலப் பெண்டிர் ஒவ்வொருவரும், ஏற்கனவே குழைத்து வைத்துள்ள மண்ணை, செங்கல் கற்களின் மேல் கொஞ்சம் கொஞ்சம் வைப்பார்கள். பிறகு கொத்தனார் அதனைச் செம்மைப்படுத்தி ஒரு சிறு மேடை போல அமைத்துக் கொடுப்பார். நம் வீடுகளில் ஏற்கெனவே செய்து வைத்திருக்கும் மணையைத் தூக்கி இந்த மேடை மேல் வைப்பார்கள். இதன் பிறகு அரசாணிக்கால் என்று நாம் வழக்குச் சொல்லாகச் சொல்லும் "அரசன் ஆணைக் கால்" நடுதல் என்ற நிகழ்ச்சி நடைபெறும்.

## அரசன் ஆணைக் கால் நடுதல்

தம்பி! இதற்கு தேவையானவை ஒரு மூங்கில் கழி, கிளுவை மரக்கிளை, பாலைமரக் குச்சி, மாவிலை, அரச இலை, ஒரு பவளம், கொஞ்சம் பால், மூங்கிலை நடுவதற்கான ஒரு மேடையும், அதன் அடுப்பும் (இந்த இரண்டும் நம் வீடுகளில் ஏற்கனவே செய்து வைத்திருப்பவை) இவைகளைக் கட்டுவதற்குக் கயிறு. அரசனுடைய ஆணையைக் காட்டும் அடையாளமாக இதனை முன்னிறுத்தி மன்னர் பின்னோராகிய நம்

நகரத்தார்கள் நம் திருமண நிகழ்ச்சிகளை நடத்தி வருகின்றோம்.

"கல்யாண வாயிலிலே[1] காவணக் காலுக்குயர்ந்த
நம் பவளக் காலதனை[2] நாட்டினோர்"

என்று மகாக்கவி பாடுவார். முத்தப்ப செட்டியாரவர்களுடைய திருமுக விலாசத்தில் வருகின்ற வரிகளையும் இங்கு நினைவு செய்ய விரும்புகின்றேன்.

இந்த ஆணைக்கால் நடுகின்ற மேடையில் உள்ள ஒரு பள்ளத்தில் சிறிது பால்விட்டுப் பவளத்தைப் போட வேண்டும். அதன் மேல் மூங்கில் கழியை ஊன்றி, அதனைச் சுற்றிலும், கம்பு தெரியாதவாறு, கிளுவை, பாலை இரண்டு குச்சிகளையும் இணைத்து, அரச இலை, மாவிலை முதலியவற்றால் சுற்றி, கயிறு கொண்டு கட்டிவிட வேண்டும். இதனை மணமகளுடைய தந்தைக்குப் பங்காளிகள் பலரும் சேர்ந்து செய்வார்கள். இந்த ஆணைக்காலுக்கு பக்கவாட்டில் குறுக்காக ஒரு கம்பு கட்டி அதில் சரவிளக்கு ஒன்றினையும் தொங்க விட்டிருப்பார்கள். இந்த விளக்கைத் திருமணத்தன்று காலையில் ஏற்றி, நிகழ்ச்சிகள் எல்லாம் முடிந்த பிறகுதான் அணைப்பார்கள். இப்படிக் குறுக்கு வசமாக கம்பு வைத்து அதில் சரவிளக்கைத் தொங்கவிட்டால் வருபவர்கள் செல்பவர்கள் அதை இடறிவிட்டுவிடக் கூடும் என்ற காரணத்தால் பெரும்பாலான வீடுகளில் இந்த விளக்கை திருமண வீட்டிற்குள்ளேயே ஏற்றி வைப்பதும் உண்டு. நம்முடைய பண்டைய வாணிபமாகிய பவள வியாபாரத்தை நினைவு கொள்ளவும், என்றும் இனிமைச் சுவை தரக்கூடிய பால், எப்போதும் கிளைகள் விட்டு வளரக்கூடிய கிளுவைக் குச்சி, எந்த வெப்ப தட்ப நிலையிலும் வாடாமல் பால் சுரந்து கொண்டே இருக்கக் கூடிய பாலைக் குச்சி, இவைகளைக் கொண்டு இந்த

1. திருமணம் நிகழ்கின்ற மணவறை. 2. அரசன் ஆணைக் கால்

ஆணைக்கால் கட்டுவது, மணமக்கள் என்றும் இனிமையுடன், கிளைவிட்டுப் பெருகி வாழ வேண்டும், என்பதைக் குறிப்பதாகும். மேலும் கிளுவைக் கம்பு ஆண் இனத்தைச் சார்ந்தது. பாலைக் குச்சி பெண் இனத்தைச் சார்ந்தது. இந்த இரண்டையும் இணைத்து அரசன் ஆணைக் காலில் கட்டி வைப்பதிலிருந்து, ஆண் பெண் இருவரையும் இங்கே இணைத்து வைக்கின்ற நிகழ்ச்சி தொடங்கப் பெறுகிறது என்பதை உற்றுணர்க. மங்கல நிகழ்ச்சிகளுக்கு உரிமை படைத்த மாவிலையும், மரங்களில் பெரியதும்; நீண்ட நாட்கள் நிலைத்து நிற்கக் கூடியதுமான அரச மர இலைகளையும் தேர்ந்தெடுத்திருப்பது, மணமக்கள் எல்லா மங்கலங்களுடன் நீண்ட நெடுங்காலம் வாழ வேண்டும் என்ற அடிப்படையில் என்பதையும் உற்று நோக்கினால் புலனாகும். இந்த அரசன் ஆணைக்கால் என்பதுதான் வழக்குச் சொல்லில் அரசாணிக்கால் என மருவி வந்துவிட்டது. இதை ஏன் முன்னிறுத்தி நம் திருமண நிகழ்ச்சிகளை நடத்த வேண்டும் எனச் சிந்தித்தேன். மன்னர்களுக்கு மகுடம் சூட்டத் தகுதி பெற்றிருந்த நாம் முன்பெல்லாம் அரசன் முன்னிலையிலேயே திருமணங் களை நடத்தி வந்திருக்க வேண்டும். ஒரே நாளில் பல திருமணங்கள் என்ற நிலைக்கு மக்கள் தொகை பெருகிவிட்ட காரணத்தால், அரசன் ஆணையாக ஒரு காலை ஊன்றி, அதன் முன்னிலையில் திருமணங்களை நடத்திக்கொள்வதை வழக்கமாகக் கொண்டிருக்கிறோம் என்று தான் எண்ண வேண்டியிருக்கிறது. அரசன் ஆணைக்காலுக்கு முன்பாக ஐந்து முளைப்பாலிகை கிண்ணங்களில், அரச இலைகட்டி அவற்றில் ஆட்டுப் புழுக்கையைப் போட்டு வைத்து விடுவார்கள். இந்த ஆட்டுப் புழுக்கை, முளைப்பாலிகையில் உள்ள தானியங்கள் வளர்ச்சியடைய எருவாக, உரமாகப் பயன் பெறவே. திருமண நிகழ்ச்சிகள் தொடங்குவதற்கு முன், புரோகிதர்களால் இந்த அரசன் ஆணைக்காலுக்கு எல்லா

மரியாதைகளும் செய்யப்படுவதையும், திருமணம் முடிந்ததும் அரசாணிப் பொங்கல் இட்டுப் படைப்பதையும் இங்கு எண்ணிப்பார்த்தால், இந்த அரசன் ஆணைக்கால் என்ற பெயரின் உட்கருத்து நன்றாகப் புரியும். எனினும் ஆய்வாளர்கள் இதுபற்றி இன்னும் ஆராய்ந்து விளக்கம் தருவார்களேயானால் மிகவும் பயனுள்ளதாக இருக்கும். இந்த நிகழ்ச்சிக்குப் பின் "மாற்றுக் கட்டுதல்" என்ற ஒன்று நடைபெறும்.

**மாற்றுக் கட்டுதல் :**

'நீல விதானத்து நித்திலப் பூம்பந்தற்கீழ்" கோவலன் கண்ணகி திருமணம் நிகழ்ந்ததாக சிலப்பதிகாரம் கூறுகிறது. நீலத் துணியை விதானமாக, மேற் கூரைத் துணியாகக் கட்டி, முத்துகள் இழைத்த பந்தலின் கீழ் திருமணத்தை நடத்தினர் என்பது வரலாறு. இதனை நினைவு கூர்வதோடு மட்டுமல்லாது, மேல் தளத்தில் உள்ள தூசியோ அல்லது பல்லி முதலான பூச்சிகளோ மணமக்கள் மீது விழுந்துவிடாமல் பாதுகாப்பதற்காகவே இப்படி மாற்றுக் கட்டியிருக்கிறார்கள். இதனை ஒரு சலவைத்தொழிலாளி வந்து, திருமண மேடைக்கு மேலே உள்ள விட்டத்தில் கட்டிச் செல்வார்.

இதன் பிறகு மங்கலப் பெண்டிர்கள், நடு வாசல், நடுவீடு முற்றம் முதலிய இடங்களிலும், மணையின் மீதும் பச்சரிசியை அரைத்துக் கிடைத்த கோலக் கூட்டினால் கோலமிட்டு அழகு செய்வர். மண நிகழ்ச்சி நடைபெறும் இடங்களையும் மாவிலை, தென்னை ஓலைக் கூந்தல்களினால் அழகும் பொலிவும் பெற அமைப்பார்கள்.

தம்பி! நடு வீட்டுக் கோலம் வரைவது ஒரு பெரிய செயல். இந்தக் காலத்துப் பெண்களுக்கு அவை எப்படி வரைவது என்றே தெரியாது.

தம்பி! இத்துடன் திருமணத்திற்கு முதல்நாள் வரை உள்ள நிகழ்ச்சிகள் நிறைவு பெறுகின்றன. இனி அடுத்த கடிதத்தில் திருமணத்தன்று நடைபெறும் நிகழ்ச்சிகளை விரிவாக எழுதுகிறேன்.

அன்புடன்

அண

6

அன்புள்ள எழில்!

நலம். நலமே விளைக!

என்னுடைய முன் கடிதத்தில் திருமணத்திற்கு முதல் நாள் இரவு வரை நடைபெறுகின்ற நிகழ்ச்சிகள் பற்றி எழுதி இருந்தேன், இனி, திருமண நாளன்று நடைபெறும் நிகழ்ச்சிகள், சடங்குகள் பற்றி எழுதுகின்றேன். அன்று முதல் நிகழ்ச்சியாக திருவிளக்கேற்றுதல் என்னும் நிகழ்ச்சி; திருமணம் தொடங்குகின்ற அன்று காலையில் "பூரம் கழித்தல்" என்னும் நிகழ்ச்சிக்கு முன்னதாக நடைபெறும். உள்வீட்டில் அதற்கு முன் திருவிளக்கேற்றி வைப்பார்கள். திருமணம் முடிவடைகிறவரை எத்தனை வகையான மின் விளக்குகளால் திருமண வீட்டை அழகு செய்தாலும், உள் வீட்டில் இந்தத் திருவிளக்கு ஒளி தந்து கொண்டிருக்கும். இதனை "மனை விளக்குறுத்து" எனக் காவியங்கள் குறிப்பிடுகின்றன. மனையில் திருவிளக்கேற்றி, அது ஒளி தந்து கொண்டிருப்பதையே இது குறிக்கும். தம்பி! இந்தக் குத்து விளக்கின் தத்துவம் என்ன தெரியுமா? திருமணமாகி வருகின்ற மணமகள்—அந்த மருமகள் கற்பின் நாயகியாக, கணவனிடம் மாறாத அன்புடையவளாக, கணவனுக்கு வருகின்ற தொல்லைகளைத் தீர்த்து வைக்கும் புத்தி கூர்மையுடையவளாக, தன் குடும்பத்தில் ஏற்படும் துன்பங்களைத் தாங்கிக்கொள்ளும் பொறுமையும், வருகின்ற சங்கடங்களை ஏற்றுக்கொள்ளும் மனவலிமையும் பெற்றவளாக இருக்கவேண்டும். இதனையே சான்றோர்கள் குத்து விளக்கின் ஐந்து முகங்கள் வாயிலாகத்

தெளிவுறுத்துகின்றனர். இந்தக் குத்து விளக்கு நமக்கு மங்கலத்தின் அடையாளம் மட்டுமல்ல; சக்தியின் வடிவமாகவும் அமைந்திருக்கிறது. இந்தத் திருவிளக்கு ஏற்றியபின் மணமகளுக்கு "பூரம் கழித்தல்" நடைபெறும். அன்று அதிகாலையில் உள்ளூர் சிவன் கோயிலிலிருந்து நாதஸ்வரக்காரர் வந்து, நம் சிறுமி ஒருத்தி சங்கு ஊத, கொழு மேளம் வாசிப்பார். இது திருமண நிகழ்ச்சிகளைக் கொளுகி விட்டோம் என்பதற்கான அறிகுறியே.

## பூரம் கழித்தல்

மணமகளுக்குப் பூரம் கழித்தல் என்பது, அதுவரை இருந்த கன்னித்தன்மையை நீக்கி, இல்லறத்திற்குரியவளாக அவளை மந்திர பூர்வமாக ஆக்குவதாகும். அதிகாலையில் மணமகளை நீராடச் செய்து, ஒரு சரமாலை மட்டும் கழுத்தில் அணிவித்துவிட வேண்டும். மணமகளுக்குத் தாயோ அல்லது அத்தையோ தான் பூரம் கழிப்பார்கள். வேப்பிலையை மணமகள் உடலில் ஏழு இடங்களில், அதாவது தலை, தோள் பட்டைகள், இடுப்பில் இரண்டு பக்கங்கள், இரண்டு பாதங்கள் இவைகளில் வைத்து, இரும்பு சத்தகம் அல்லது மரக்குச்சியினால் தட்டி விடுவார்கள். பிறகு புரோகிதர் விநாயகர் பூஜை செய்து, வர்ண கும்ப பூஜையும் செய்து பூரம் கழிப்பார். இதன் பிறகு மீண்டும் மணமகள் ஒரு முறை நீராட வேண்டும். இதே போல முன் காலங்களில் மணமகன் வீட்டில் 'கன்னி நீராடுதல்' என்ற நிகழ்ச்சி நடைபெற்று வந்திருப்பதாக அறிகிறோம். மணமகனுக்கு நாவிதர் வந்து முகச் சவரம் செய்து நீராடச் செய்வர். இது பெரும்பாலும் திருமணத்திற்கு முதல் நாளே நடைபெற்று வந்திருக்கின்றது. இதுவும் மணமகனிடம் உள்ள கூச்ச உணர்வைப் போக்கி இல்லற வாழ்க்கைக்கு உரியவனாக அவனை உருவாக்க ஏற்பட்ட நிகழ்ச்சியே. காலத்தின் சூழ்நிலை கருதி "கன்னி நீராடுதல்" என்ற நிகழ்ச்சியை இப்போது நிகழ்த்துவதில்லை.

இதுபோல இன்னும் சில நிகழ்ச்சிகளை நீக்கி விட்டிருக்கின்றோம். அவை எவையெவை என்ற விவரம் பிறிதொரு கடிதத்தில் விளக்கமாகவே எழுதுகிறேன். மணமகளுக்குப் பூரம் கழித்த பிறகு "தும்பு பிடித்தல்" என்ற நிகழ்ச்சி.

## தும்பு பிடித்தல்

முதல் நாள் இரவு படைப்பு முடிந்ததும் திருமணம் நிகழ்கின்ற நடு வீட்டில் அன்று காலை குத்துவிளக்கு ஏற்றி வைத்து அந்த அறையின் வெளிச்சுவற்றிலும், உள்வீட்டுச் சுவற்றிலும் கதவிலும் மங்கலத்தைக் குறிக்கும்படி கோலக் கூட்டினால் ஏட்டுக்கயிறு கொண்டு படத்தில் காட்டியது போன்ற வடிவத்தில் வரைவார்கள். இதை கணவன் மனைவியோ அல்லது இரண்டு மங்கலப் பெண்டிர்களோ செய்வது வழக்கம். இதன் வடிவத்தைப் பார்க்கும்போது இறைவனை அந்த நடுவீட்டைக் கோயிலாக எண்ணி எழுந்தருளச் செய்வதுபோல தோன்றும். வடமொழியில் அந்தவீடு 'தெய்வ சாந்நித்தியம்' பெற்று விட்டது என்று கூறுவார்கள். இப்படித் தும்பு பிடித்துவிட்டால் அதன் பிறகு திருமண நிகழ்ச்சிகள் முடியும் வரை வீட்டுக்கு விலக்கான பெண்கள் அந்த அறைக்குள் செல்ல மாட்டார்கள். இதன் பிறகு மாப்பிள்ளை (மணமகனைத் திருமணத்தன்று நாம் இப்படித்தான் அழைக்கின்றோம்.) அழைப்பிற்கான ஏற்பாடுகள் நடைபெறும்.

மணமகன் திருமணத்தன்று காலை, ஒரு நல்ல நேரத்தில் புறப்பட்டு மாமக்காரருடன் மணமகளின் ஊரில் உள்ள சிவன் கோயிலுக்கோ அல்லது பக்கத்தில் உள்ள மடத்திலோ சென்று தங்கியிருப்பார். மணமகன் தன் வீட்டிலிருந்து புறப்படும்போது, மணமகனுக்கு அப்பத்தாள் (தந்தையாரின் தாய்) அவரை நடுபத்தியின் கோலத்திற்கு



முன் நிறுத்தி அழகு ஆலத்தி எடுப்பார்கள். அழகு ஆலத்தியில் மூன்று ஆலத்திகள் இருக்கும். சதுர வடிவில் 4 திரிகளும், கூம்பு போன்ற இரு ஆலத்திகளிலும் ஒவ்வொரு திரியும் இருக்கும். மணமகனுக்கு முன்பு ஸ்லேட் விளக்கு வைத்து, ஆலத்தி எடுத்து, விபூதி பூசி வழியனுப்பி வைப்பார்கள். அப்பத்தாள் இல்லையென்றால் மணமகனுக்கு அத்தை இந்தச் சடங்குகளைச் செய்யலாம். அவர்களும் வர இயலாத காரணமிருப்பின், வீட்டிற்குப் பெரியவர்கள் செய்வார்கள்.

## மாப்பிள்ளை அழைப்பு :

மணமகள் வீட்டார் ஒரு பெரிய தட்டில் மணமகனுக்கு அணிவிக்கின்ற ஜரிகை வேட்டி, துண்டு, மாலை, சங்கிலி, கெடிகாரம், மோதிரம் முதலியவைகளை எடுத்துக்கொண்டு, மணமகன் தங்கியிருக்கும் இடத்திற்கு மேளவாத்தியம், சங்கு முதலியன ஒலிக்க, மணமகள் வீட்டு உறவினர்கள் ஊர்வலமாக வருவார்கள். மணமகளின் தந்தை ஒரு சட்டியில் பாக்கு, மஞ்சள், இரு தேங்காய்களை வைத்து எடுத்துக்கொண்டு வருவார். இரண்டு பணியாட்கள் ஆளுக்கொரு ஸ்லேட் விளக்கை ஏந்திக் கொண்டு ஊர்வலமாக வந்து மணமகனுக்கு முன் அமர்ந்து கொண்டு ஆடை அணிகளை எல்லாம் அணிவிப்பார்கள்.

பிறகு மணமகனை ஊர்வலமாக அழைத்துக் கொண்டு, பக்கத்தில் உள்ள பிள்ளையார் கோயிலுக்குச் சென்று வணங்கியபின், மணமகள் வீட்டுக்கு அழைத்துச் செல்வர். இந்த நகர்வலம், என் பெண்ணை மணந்து கொள்ளும் மணமகன் இவர்தான் என்று ஊர்மக்களுக்கு அறிமுகம் செய்து வைப்பதற்கே என்று கொள்ள வேண்டும். மணமகனின் தந்தை கொண்டு வருகின்ற தேங்காய்ச் சட்டி ஏன் என்று சிந்தித்துப் பார்த்தால் அன்று அரசர்களை பூர்ண கும்ப மரியாதையுடன் அழைத்து வருவதுபோல, இன்று மணமகனையும் அதே பூர்ண கும்ப மரியாதையுடன் அழைத்து வருவது என்பது புலனாகும். சில வட்டகைகளில் மாப்பிள்ளை அழைப்பின் போது பெண்கள் குரவை ஒலி எழுப்புவது உண்டு, சிலப்பதிகாரக் காவியத்தில் காணும் இவ்வழக்கம் இப்போது சில பகுதிகளில் மட்டுமே இருந்து வருகிறது. மணமகனை அழைத்து வரும்போது, அவனுடைய தாயார் ஒரு தாம்பாளத்தில் மணமகளுக்கு உள்ள ஆடை, மாலை, கழுத்து உரு, சிறு தாலி முதலியவைகளை வைத்து எடுத்து வருவார்கள்.

மணமகனுக்குச் சகோதரி பால்பானை எடுத்துக்கொண்டு வருவார்கள். மணமகன் வீட்டுப் பணியாட்கள், ஏற்கனவே தயார் செய்து வைத்துள்ள முளைப்பாலிகையையும், விதைக் கோட்டையையும் கொண்டு வருவார்கள். திருமணத்தன்று காலையில் அல்லது முதல்நாள் மணமகன் வீட்டிலிருந்து இருவர் வந்து, மணமகள வீட்டில் செய்து வைத்திருக்கும் கழுத்து உருவை வாங்கிச் சென்றிருப்பார்கள், மணமகன் வீட்டில் இரு பெரியவர்கள் இந்த கழுத்து உருவின் 31 உருப்படிகளையும் கோர்த்து தயார் செய்து வைப்பார்கள்.

தம்பி!' இந்தக் கழுத்து உரு கோப்பது என்பது ஒரு பெரிய கலை. அதுபற்றி விளக்கமாய்ப் பிறிதொரு கடிதத்தில் எழுதுகிறேன். இப்படி மங்கல வாத்தியங்கள் முழங்க, ஊர்வலமாக மணமகனை அழைத்து வந்து, மணமகள் வீட்டு நடுக்கூடத்தில், கோலத்திற்கு முன் நிற்க வைத்து, மணமகளுக்கு அப்பத்தாள் அல்லது அத்தை வந்து ஆலத்தி எடுத்து திருநீறு இட்டு அழைத்துச் சென்று, நடுவாசலில் கிழக்கு முகமாக உட்கார வைப்பார்கள். இதன் பிறகு மணமகனுக்கும் மணமகளுக்கும் தனித்தனியே பகவத்யானமும் (நம் சமூகத்தினர் இதைக் காலப் போக்கில் பக்வணம் என்று செல்லி வருகிறோம்) காப்புக்கட்டுதலும் நடைபெறும்.

## பகவத்யானமும் காப்புக் கட்டுதலும் :

திருமண வாழ்வு சிறக்க இறைவனை எண்ணி வழிபடுதலே பகவத்யானம், பவணம் என்றால் தன்னைச் சுத்தி செய்து கொள்ளுதல் என்றே பொருள். பவணம் என்ற சொல்லே நாளடைவில் பாவணமாக மாறி இன்று வழக்குச் சொல்லாக ஆகிவிட்டது. மணமகனுக்கு முதலிலும், மணமகளுக்குப் பிறகும், தனித்தனியே புரோகிதர் ஒருவர் சங்கல்பம் செய்து வைத்து, கணபதி பூஜை செய்வார். பிறகு

தாய்மாமனைக் (மாமக்காரர்) கொண்டு வலது மணிக்கட்டில் ஒரு சிறு வெள்ளி நாணயத்தை (முன்காலத்தில் 2 அணாப் பணம் தற்போது 4 அணாக் காசு) சிகப்புத் துணியில் முடிந்து, விரளி மஞ்சளையும், (நுனி உடையாதது) சேர்த்துக் கட்டிவிடச் செய்வார். இதுதான் காப்புக் கட்டுதல் என்பது. காப்பு என்பது மஞ்சள் காப்பு. ஒரு செயலை முன்னின்று முடிக்க முனைந்து நிற்பது என்பதே. மங்கல நிகழ்ச்சிகளில் அந்த நிகழ்ச்சிக்கு உறியவர்கள் கையில் காப்புக் கட்டுவது வழக்கம். அகநானூற்றில் திருமண நிகழ்ச்சிகளை விவரிக்கும் பாடலில் அறுகம்புல் தண்டுகளால் வெள்ளி நூலில் கோத்த ஒரு காப்புக் கட்டப்பெற்றதாக வருவதை இங்கு நினைவு கூர்க.

இங்ஙனம் இருவருக்கும் காப்புக்கட்டி முடிந்ததும் மணமகனுக்குத் தாயார் கொண்டுவந்த தாம்பாளத்தில் உள்ள திருமாங்கல்யத்திற்கு (கழுத்து உரு) இலட்சுமி பூஜை செய்து மணமகளுடைய தாய்மாமன் தங்கள் வீட்டுப் பெரியவர்களிடம் காட்டி வாழ்த்துப் பெற்று, நடு வீட்டில் கொண்டுபோய் வைத்து விடுவார்கள். மணமக்கள் இருவருக்கும் தனித்தனியே பகவத்யானம், காப்புக்கட்டுதல் நடைபெறும்போது அவரவர்கள் வீட்டுப் பெரியவர்கள், சுற்றத்தார்கள் அவர்களைப் பூமணம் இட்டு வாழ்த்துவார்கள். இதன் பிறகு திருப்பூட்டுதல் என்ற உயரிய நிகழ்ச்சியாக திருமாங்கல்யம் அணிவித்தல் நடைபெறும்.

தம்பி! திருப்பூட்டுகின்ற நிகழ்ச்சியும், மணவறைச் சடங்குகள் பற்றியும் சற்று விளக்கமாகவே எழுத வேண்டும். ஆதலின் நாளை விரிவாகவே எழுதுகிறேன்.

அன்புடன்

அண

## 7

அன்புள்ள எழில் !

நலம். நலமே விளைக!

நேற்றைய என்னுடைய கடிதத்தில் பூமணம் இட்டு வாழ்த்துவார்கள் என எழுதியிருந்தேன். அப்படி என்றால் என்ன என்று விளக்கம் கேட்டு நீ எழுதியிருப்பதைப் பார்க்கும் போது, உண்மையிலேயே கருத்தூன்றி என் கடிதங்களை நீ படிக்கின்றாய் என்பது புலனாகிறது, மிக்க மகிழ்ச்சி.

மலர்களைப் பசும்பாலில் நனைத்து, மணமக்கள் உடலில் மணிக்கட்டு. முழங்கை தோள்பட்டை ஆகிய மூன்று இடங்களையும் தொட்டு வாழ்த்துதல் "பூமணம்" இடுதல் என்றும், முளைப் பாலிகைக் கிண்ணங்களில் (அரசன் ஆணைக்கால் முன் முதல்நாள் இரவு வைத்த 5 கிண்ணங்கள்) முளைப்பாலிகையை எடுத்து கொஞ்சம் கொஞ்சம் போட்டு வாழ்த்துதல் அரிமணம் இடுதல் என்றும் சொல்வார்கள். பூமணம், அரிமணம் இடுதலை மூன்று முறை செய்வார்கள். பால் என்றும் இனிமைச் சுவையுடையது. மலர்கள் எப்போதும் மணம் பரப்பிக் கொண்டிருக்கக் கூடியவை. நவதானியங்கள் முளைவிட்டு வளரக்கூடியவை. மணமக்கள் இதேபோல் வாழ்க்கையில் இனிமையுடன், மணம் பரப்பி, கிளை விட்டுப் பல்கிப் பெருகி வாழவேண்டும் என்ற கருத்தே இதன் பின்னணியில் உள்ள தத்தவம். மணமக்களை நெல்லும் பூவும் எடுத்து நீரில் நனைத்துப் பெரியவர்கள் வாழ்த்துதலை அரிமணமிடுதல்

என்று நாம் கூறுகிறோம். களத்தில் அறுவடையாகும் போது முதலில் தெய்வத்திற்கு 'அரி' எடுத்து வைத்து வணங்குவது பழக்கம். அரி என்பது நெல். மணம் என்பது பூவைக் குறிக்கும். இரண்டையும் சேர்த்து வாழ்த்துதல், வளமும் இன்ப வாழ்வும் பெறுக என்பதின் அடையாளமே. அக நானூற்றில்

"நீரொடு சொரிந்த ஈரிதழ் அலரி
பல்லிருங் கதுப்பின் நெல்லொடு தயங்க"

என்ற வரிகள், நீரில் நனைத்துச் சொரிந்த புது மலர்களும் நெல்லும் மணமகளின் கூந்தலிலே விளங்க வாழ்த்தினர் என்ற பொருளைக் குறிப்பதைக் காண்க. இதன் பிறகு திருப்பூட்டுதல் என்ற நிகழ்ச்சி நடைபெறும்.

ஒரு தாம்பாளத்தில் மஞ்சள், குங்குமம், கழுத்து உரு, சிறுதாலி, மாலை, நகரக் கோயிலிலிருந்து வந்த மாலை முதலியவற்றை வைத்து (இதனைத்தான் மாப்பிள்ளை அழைப்பின் போது மணமகனின் தாயார் கொண்டு வருவார்கள்) மணமகனுக்குத் தாய்மாமன் (மாமக்காரர், இவருக்கு மிகுந்த மரியாதை உண்டு. எந்த ஒரு நிகழ்ச்சியும் இவரை முன்னிறுத்தியோ அல்லது இவர் செய்த பின்னரோதான் மற்றவர்கள் செய்யமுடியும்.) திருமணத்திற்கு வந்திருக்கின்ற பெரியோர்கள், சான்றோர்கள், உற்றார் உறவினரிடம் காட்டி வாழ்த்துப் பெறுவார்.

## திருப்பூட்டுதல் :

மணமகளுக்கு, மணமகனின் தாயார் கொண்டு வந்த ஆடைகளை அணிவித்து, நன்கு அலங்கரித்து, மணமேடை மீது, கிழக்கு முகமாக நிற்கச் செய்வார்கள். பின்னர் மணமகனை அழைத்துவந்து மணமகளுக்கு எதிரே நிற்கச் செய்வர். மணமகளின் கைகள் இரண்டையும் ஏந்தச்

செய்து, அதில் பச்சரிசி, தேங்காய் முதலியவற்றைக் கொடுப்பார்கள். மணமகன் திருவருளை நினைவில் நிறுத்தி, கோவிலிலிருந்து வந்துள்ள திருநீற்றைத் தான் பூசிக்கொண்டு, மணமகள் நெற்றியிலும் பூச வேண்டும். பிறகு கோவில் மாலையை மணமகள் கழுத்தில் அணியவேண்டும். பின்பு பெரியவர் ஒருவர் துணையுடன், அவர் எடுத்துத் தருகின்ற கழுத்துருவை நிதானமாக வாங்கி, மணமகளின் நெஞ்சுக் குழிக்குக் கணக்காக இருக்கும்படி பிடித்துக்கொண்டு, சிக்கிக் கொள்ளாதபடி, மணமகள் கழுத்தில் அணிவித்து, மூன்று முடிச்சுக்களைப் போட வேண்டும். அப்போது கெட்டி மேளம் வாசிப்பார்கள். இப்படி மூன்று முடிச்சுகள் போட்டதும் கைகளை எடுத்துவிடாமல் நன்றாக இழுத்துப் பார்த்துக் கொள்ளவேண்டும். பிறகு சிறு தாலியை அணிவிக்க வேண்டும். அதன் பின்னர் திருமாங்கல் யத்திலும் மூன்று முடிச்சுகளின் மீதும், சிறுதாலியிலும் மஞ்சள் தொட்டு வைத்து, குங்குமம் இடவேண்டும்.

மணமகள் கையில் உள்ள பச்சரிசி, தேங்காய் முதலியவற்றை பக்கத்தில் உள்ளவரிடமுள்ள தாம்பாளத்தில் வைத்துவிட்டு, மணமக்கள் இருவரும் மூன்று முறை மாலை மாற்றிக் கொள்ளவேண்டும். மணமகன்தான் முதலில் மாலையிட வேண்டும்.

தம்பி! திருமங்கல நாண் பூட்டும்போது மணமகள் கைகளில் ஏன் பச்சரிசியும் தேங்காயும் கொடுக்கிறார்கள் எனச் சிந்தித்துப் பார்த்தால், முக்கண்ணன் முன்னிலையிலும் நிலமகள் சாட்சியுமாக உன்னை மனைவியாக ஏற்றுக் கொள்கிறேன் என்று உறுதி எடுத்துக் கொள்வது நன்கு புலனாகும்.

திருமங்கல நாண், சிறுதாலி முதலியன வைத்துள்ள தாம்பாளத்தினை வந்திருக்கின்ற சான்றோர்கள்,

பெரியவர்கள் முதலியவர்களிடம் காட்டி வாழ்த்துப் பெறும்போது புரோகிதர் கீழ்க்கண்ட மந்திரத்தைச் சொல்வார். பல திரைப்படங்களில் கூட நீ பார்த்தும், கேட்டும் இருக்கலாம்.

"மாங்கல்யம் தந்து நாநேன
மம ஜீவன ஹேதுகு
கண்டே பத்நாமி சுபகே
சஞ்சீவ சரத ஸதம்"

'தம்பி! இதை நான் கூட நீண்ட நாட்கள் வரை ஒரு மந்திரம் என்றுதான் எண்ணியிருந்தேன். ஆனால் வடமொழி வல்லுநர்களை அணுகிக் கேட்டபோது,

"இது புனிதமான கயிறு, நான்
நல்லவிதமாக வாழ்ந்திருக்க வலிமை
பெற்றது. இதை நான் உன் கழுத்தில்
அணிவிக்கின்றேன். நீ சகல செல்வாக்கும்
படைத்தவளாய் நூறு ஆண்டுகள் சுகபோகங்களுடன்
வாழ்ந்திருப்பாயாக"

என்ற பொருளைக் கொண்ட ஒரு ஸ்லோகம் என்று சொன்னார்கள்.

சிற்றின்பம், சினம், உன்மத்தம் என்னும் மூன்று குற்றங்களும் நீங்கி, அறம், பொருள், இன்பம் என்ற மூன்று உறுதிப் பாட்டில் ஒழுகி, சிந்தை, உடல், சொல், இம்மூன்றாலும் ஒன்றுபட்டு வாழ்வோம் என்பதனைச் சுட்டிக்காட்டவே மூன்று முடிச்சுகள் போடப் பெறுகின்றன. பொற்கிழிக் கவிஞர். திரு. அரு சோமசுந்தரம் அவர்கள் இந்த மூன்று முடிச்சுகள் போடப் பெறுவதற்காகக் கூறுகின்ற காரணத்தை அவர்களுடைய கவிதையாகவே இங்கே தந்துள்ளேன்.

"தாலியினைக் கட்டுகையில் முடிச்சு மூன்று
தன்னிகரில் கணவனவன் போடு கின்றான்

நூலிழையில் முடிவதிலே பொருளும் மூன்று
நோன்பாக உடலோடு பொருளும் ஆவி
சேலினது விழியானைச் சேர்ந்த தென்று
செம்மையுடன் முடிகின்றான் முடிச்சு மூன்று"

தம்பி! இந்த மூன்று முடிச்சுகளை ஏன் போடவேண்டும் என்பதற்குக் காஞ்சி காமகோடி பீடம் புதுப்பெரியவர்கள் ஸ்ரீஜெயந்திர சரஸ்வதி சுவாமிகள் கூறுகின்ற விளக்கத்தையும் இங்கே குறிப்பிடுவது பொருந்தும்.*

"தாலி கட்டும்போது மூன்று முடிச்சுக்கும் விளக்கம் விழிப்பு நிலை, தூக்கநிலை, கனவுநிலை இந்த மூன்றிலும் 'நீ என் மனைவி, நான் உன் கணவன்' என்று மூன்று நிலைகளிலும் நினைவில் நிலைத்திருக்க வேண்டும் என்றுதான் மாங்கல்யம் முடியப் பெறுகின்றது. இன்னும் பல அர்த்தம் சொல்லலாம் அந்த அனைத்தும் இந்த மூன்றில் அடங்கும்.

திருப்பூட்டி முடிந்ததும், வந்திருக்கின்ற அனைவருக்கும் இனிப்புகள் வழங்கப்பெறும். மணமக்கள் இருவரும் கைகூப்பிய வண்ணம் வந்திருக்கின்றவர்களிடம் வாழ்த்துப் பெறுவர். திருமங்கல நாண் பூட்டியதும் மணமக்களின் தந்தையர் இருவரும் நடு வீட்டில் அமர்ந்து 'இசைவு பிடிமானப் பத்திர'த்தில் கையொப்பமிடுவர்.

திருமாங்கல்யம் கட்டினால் மட்டும்கூட, ஒரு நகரத்தார் திருமணம், சட்டப்படியோ அல்லது சாஸ்திரப் படியோ முழுமை அடைவதில்லை. இந்த இசைவு பிடிமானத்தில் கையொப்பமிட்ட பின்னர்தான் நகரத்தார் திருமணம் செல்லுபடி ஆகின்றது. இந்தப் பத்திரம் திருமணத்திற்கு முதல் நாளே தயார் செய்து வைத்திருப்பார்கள். இதில் இன்னார் மகள் இன்னாரை, இன்னார் மகன் இன்னாருக்கு திருமணம் செய்து

* ஆதாரம் : "மங்கை" செப்டம்பர் 84 இதழ்

கொடுப்பதாகவும் அதற்கு இன்னின்ன வகைகளில் இன்னின்ன பொருட்கள் தருவதாகவும் குறிப்பிட்டு மணமக்கள் தந்தையர் இருவரும் கையொப்பமிடுவர். இந்தப் பத்திரத்தின் மாதிரி ஒன்றும் கீழே தந்துள்ளேன். இந்தப் பத்திரம் முன்காலத்தில் பனைஓலையில் தான் எழுதி வந்திருக்கிறது. இப்போது அச்சுப் போட்ட பத்திரமே உபயோகிக்கிறோம். இந்தப் பத்திரம், அரசாங்க அலுவலகத்தில் பதிவு செய்து கொள்கின்ற பத்திரத்திற்குச் சமமானதே.

உ

**சிவமயம்**

__________ ஆண்டு __________ மாதம் __________ தேதி

________________________________________

________________________________________

________________________________________

பாணிக்கிரஹணம் பண்ணிக்கொண்டமைக்கு இவர்/அவர் பூஷணம் பூட்டும் பொன் ஒன்பது,[1] ஆறு கல்லெடை பொன்பதிமுக்கழஞ்சு[2], இவர்/அவர் சீதனங்கொடுக்கும் பொன் இம்மாறு[3] இவ்வெடை பொன் ஆறு கழஞ்சு, வெள்ளி ஆறு கழஞ்சு, வெண்கலம் தராப்பலம்[4] அறுபத்தொன்று, வெள்ளாட்டிக்குப்[5] பணம் முப்பது,

1. ஒன்பது மாற்றுள்ள ஆறு கல்லெடை கொண்ட பொன் (நாணயம் பொன் – 10 பணம். பணம் என்பது இரண்டு அணா.
2. 1/6 அவுன்ஸ் அல்லது 5/12–தோலா அல்லது ஒன்றே காலே வீசம் கால் வீசம் வராகனெடை. பல்லவர் காலத்தில் செலாவணியில் இருந்தது.
3. இவ்விதம் அல்லது இங்ஙனம்
4. எட்டுப் பங்கு செம்பு, ஐந்து பங்கு ஈயம் கொண்ட கலப்பு உலோகம்.
5. பணிப்பெண் அல்லது வேலைக்காரி.

சீராட்டுச் சக்கரம் அறுபத்தொன்று இவ்வகைப்படி செய்வோம். இவர்/அவர் நன்கொடை கொடுக்கும் பொன் ஐம்பது, மோதிரம் விராகனிடை மூன்று. இவர்/அவர் உகந்துடைமையாக கொடுக்கும் பொன் வளையல் ஏழு கழஞ்சு, இவ்வகைப்படி செய்வோம், இந்த நாள் இவரிடும்/அவரிடும் பொன் இவர்/அவர் சொற்படி தெரிசனை பதின்முக்கழஞ்சு இவ்வகைப்படி செய்வோம்.

இந்த இசைகுடிமானத்தில் எழுதினேன் ____________

____________________________________________

____________________________________________

கையெழுத்து ____________________________

கையெழுத்து ____________________________

இதே மாதிரி அவரவர்கள் வழக்கப்படி, தங்கள் கோயில், பிரிவு, பெயர் முதலியவைகளைக் கோடிட்ட இடத்தில் எழுதி முழுமை செய்வார்கள், இந்த சீர்முறைகள் இன்றைய நடைமுறைக்கு ஒவ்வாததாக இருப்பினும் இதுவே நாம் தொன்று தொட்டு எழுதி வருகிற பத்திரத்தின் வாசகம். மணமகன் வீட்டுப் பத்திரத்தில் அவன் தகப்பனார் முதலிலும், மணமகள் வீட்டுப் பத்திரத்தில் அவளுடைய தகப்பனார் முதலிலும் கையொப்பமிடுவர். கோயில், பிரிவு முதலியன பற்றி ஏற்கனவே குறிப்பிட்டுள்ளேன். இந்த இரண்டு கையொப்பமிட்ட பத்திரங்களும் மணமகள் தந்தையாரிடமே பாதுகாப்பாக இருந்து வந்திருக்கிறது. இப்போது சில வீடுகளில் இப்படியும், சில வீடுகளில் வீட்டுக்கொரு பத்திரமாகவும் வைத்துக் கொள்கின்றனர். இசைவு பிடிமானம் எழுதியவரும் இதில் சாட்சிக் கையெழுத்து இடவேண்டும்.

தம்பி! விளையாட்டாக ஒரு பழமொழி தெரிந்தோ தெரியாமலோ நம்மிடையே நிலவி வருகிறது. “கல்யாண சந்தடியில் தாலி கட்ட மறந்தான்” என்பதே. எவ்வளவுதான் அவசரம் என்றாலும், எவனாவது தாலி கட்ட மறப்பானா? நன்றாகச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். தாலி கட்டுவதற்கு முன்பாக, வந்திருக்கின்ற சான்றோர்களிடம் தாலியைக் காட்டி வாழ்த்துப் பெறுவது வழக்கம். முகூர்த்த நேரம் நெருங்கிவிட்ட காரணத்தால்,தாலியைக்காட்டி வாழ்த்துப் பெறாமல், கட்டி விட்டான். அதாவது கல்யாண அவசரத்தில் தாலி காட்ட மறந்தான். ஒரு நெடில் ஒரு குறிலாக மாறியதால் வந்த குழப்பத்தைப் பார்த்தாயா!

தம்பி! திருமாங்கல்யம் பூட்டியதும், “திருப்பூட்டிய சடங்கு” நடைபெறும்.

அன்புடன்
அண

## 8

**அன்புள்ள எழில் !**

நலம். நலமே விளைக!

என்னுடைய முன் கடிதத்தில் திருப்பூட்டுதல் என்ற மங்கல நாண் அணிவிக்கின்ற நிகழ்ச்சி வரை எழுதியிருந்தேன். திருப்பூட்டுதல் என்னும் நிகழ்ச்சி எந்த இலக்கியத்திலாவது இடம் பெற்றுள்ளதா எனக் கேட்டு எழுதி இருக்கிறாய். தஞ்சைவாணன் கோவையில் (359வது பாடல்) "சுற்றத்தார் முன்னிலையில், நீ திருப்பூட்டியது", அதாவது மணமகள் கழுத்தில் நீ தாலி கட்டியது என்று கூறியிருப்பதிலிருந்து அறிய முடிகிறது.

**திருப்பூட்டிய சடங்கு :**

தம்பி! திருப்பூட்டி முடிந்ததும், தொடர்ந்து திருப்பூட்டிய சடங்கு நடைபெறும்.

மணமகனின் தாயார் அல்லது சகோதரி அல்லது இருவரும் செய்கின்ற சடங்கு இது.

ஒரு சடங்குத் தட்டில் ஏழு கிண்ணங்கள் இருக்கும். அவற்றில் பிள்ளையார், வெத்திலை பாக்கு ஒன்றிலும், மற்றவை ஒவ்வொன்றிலும் மஞ்சள், விபூதி, பச்சரிசி, உப்பு, புளி, பஞ்சு முதலியனவும் வைத்திருப்பார்கள். ஒரு படியில் நிறைய நெல் வைத்து அதன்மேல் கத்திரிக்காய் ஒன்று வைத்திருப்பார்கள். (இதனை நாம் "நிறை நாழி" என்று சொல்லுகிறோம்.) ஒரு கெண்டிச் செம்பில் (மூக்கு வைத்த செம்பு) தண்ணீர் வைத்திருப்பார்கள். இவைகளை ஏற்பாடு

செய்து கொண்டு, மணமகளை மணையின் மீது கிழக்கு முகமாக நிற்க வைத்து, கீழே தடுக்குப் (பனை ஓலையால் முடையப்படுவது, தவிசுப் பலகைக்கு போடுவது, ஒருவர் மட்டுமே இருக்கத்தக்க அளவுடையது.) போட்டு, அதில் சடங்குச் செய்கிறர்கள் நின்று கொள்வார்கள். முதலில் சடங்குத் தட்டில் உள்ள விபூதியை வலது கரத்தால் எடுத்து, சடங்கு செய்கிறவர்கள் தான் பூசிக் கொண்டு, பிறகு பெண்ணுக்கும் பூச வேண்டும். இந்த ஏழு கிண்ணங்கள் ஒவ்வொன்றையும் மூன்று மூன்று முறை தொட்டு, விபூதியைத் தானும் கழுத்தில் பூசிக் கொண்டு பெண்ணுக்கும் கழுத்தில் பூச வேண்டும். இவ்வாறு இருபத்தியோரு முறை பூசியதும், வலது கரத்தில் கெண்டிச் செம்பை எடுத்துக் கொண்டு மணமகள் கையில் ஒரு வெத்திலையைக் கொடுத்து, முதலில் நிறை நாழியை சடங்கு செய்பவரும், மகளும் இடது கையினால் பிடித்துக்கொண்டு வலக்கையினால் வெத்திலையில் தண்ணீரை ஊற்ற வேண்டும். மணமகள் அந்த நீரை பாதங்களில் வடித்துவிட்டு, இரு கைகளினாலும் வெத்திலையை நெற்றியில் வைத்து வணங்க வேண்டும். இதுபோல ஸ்லேட் விளக்கு, பிள்ளைக் குழவி முதலியவைகளையும் வைத்துக்கொண்டு செய்ய வேண்டும். தன் வீட்டிற்கு வருகின்ற மருமகள் தான் தருகின்ற இந்தப் பொருள்களை வைத்துக்கொண்டு, செம்மையாக இல்லறக் கடமைகளை ஆற்றவேண்டும் என்று உறுதி பெற்றுக் கொள்வதென்று சிலரும், புகுந்த வீட்டிற்கு வருகின்ற மருமகள், தன் மாமியாருக்கு (மணமகனின் தாய்) வணங்கிப் பாத பூஜை செய்வதென்று சிலரும் சொல்கிறார்கள்.

இப்படிச் சடங்குகள் முடிந்ததும், ஸ்லேட் விளக்கைத் தவிர மற்றவைகளை மணமகளின் பின்புறமாகச் சுற்றி, இடவலமாக, கொடுத்து வீட்டுக்குள் வைத்துவிடுவார்கள். ஸ்லேட் விளக்கை மட்டும் நேராகவே வீட்டுக்குள்

கொடுத்து விடுவார்கள். இதன் பிறகு கல்யாண வேவும், மாமவேவும் நடைபெறும்.

தம்பி! வேவு என்பது வேள்வு (விருப்பம்) என்ற சொல்லின் திரிபே ஆகும். தன் மகள் வாழப் புகுந்த இடத்தில் வளமுடன் வாழவும், தன் தாயின் வீட்டிலிருந்து (மணமகளுக்கு ஆயாள் வீடு) பொருட்கள் வரவில்லையே என்ற குறையினைப் போக்கவும், அனைத்து உணவுப் பொருட்களையும் தாங்களாகவே விரும்பித் தலைச்சுமையாகவே கொண்டுவந்து கொடுப்பதுதான் வேவு. இதுதான் தொன்று தொட்டு நடைபெற்று வந்தது. இன்றும் பச்சரிசி, வாழை இலை, பரங்கிக்காய், வாழைத்தார், கற்கண்டு, மஞ்சள், பழங்கள், மாமக்கிடாய் முதலியவைகளைப் பணியாட்கள் தலைமேல் வைத்து, மணமகளுக்கு ஆயாள் வீட்டு பங்காளிகள் எல்லோரும் மேளவாத்தியத்துடன் கொண்டு வருவார்கள். மணமகள் வீட்டு முற்றத்தில் கோலத்திற்கு முன்பாகத் தாய்மாமன் வீட்டினர் ஒவ்வொருவரும் தங்கள் தலையில், அரிசி, கத்தரிக்காய் கொண்ட ஓலைக்கடகாம் ஒன்றினை தலைமீது வைத்துக்கொள்ள, முதலில் மணமகளும் பிறகு அவள் குடும்பத்தைச் சார்ந்தவர்களும் ஒவ்வொருவராக வந்து 5,7,9 என்ற எண்ணிக்கையில் இறக்கி, நடுவீட்டில் கொண்டு போய் வைத்துவிடுவார்கள்.

இது மாமன் முறையினர் தங்கள் சகோதரி மகள் திருமணத்திற்கு கொண்டு செல்கின்ற சீர் வரிசைகளாகும். இந்த வேவுக்கு வேண்டிய பொருள்கள்: ஓலைக் கடகாம் ஒன்று, அதில் பச்சரிசி படி 2, கத்தரிக்காய் 2, தேங்காய் 2 வீதம் உறவினர்களின் எண்ணிக்கைக்கு ஏற்ப ஐந்துக்குக் குறையாமலும் பதினொன்றுக்கு மேல் போகாமலும் தயார் செய்து கொள்வார்கள்.

இந்த வேவுகளில் ஆடி, வேவு, கார்த்திகை வேவு, முதல் வருட வேவு, விளையாட்டுப்பெட்டி வேவு என்று

பல உண்டு. ஒவ்வொன்றையும் நடத்திக் கொண்டிருப்பது என்பதற்குக் காலம் அதிகமாகும் என்பதால் இந்த வேவுகளுக்காக ஏதாவது ரொக்கம் கொடுத்துவிடுவதும் உண்டு. இதன் பிறகு மணவறை நடைபெறும்.

**மணவறை:**

இருமாமக்காரர்களும் மணமக்களை அழைத்து வந்து மணையில் அமரச் செய்வார்கள். புரோகிதர் ஒருவர் மூலம் விநாயகர் பூஜை, வர்ண கும்ப பூஜை செய்து, அக்கினி வளர்த்து நவக்கிரஹ ஹோமம், ஆயுஷ்யஹோமம் செய்த பின்னர் மணமக்கள் வீட்டாருடைய உறவினர்கள் ஒவ்வொருவராக வந்து பூமணமிட்டும், அரிமணமிட்டும் (இது பற்றி ஏற்கனவே எழுதியுள்ளேன்) வாழ்த்துவார்கள். இத்தகைய நிகழ்ச்சிகள் எல்லாம் மாமக்காரர்கள் முதலில் செய்த பிறகே மற்றவர்கள் செய்யவேண்டும். பிறகு மணமக்களின், உடன் பிறந்தவரில் ஒருவர் மணமகனுக்கும், மணமகனின் உடன்பிறந்தவர்களில் ஒருவர் மணமகளுக்கும் திரட்டுப்பால் தடவுவார்கள்.

அதாவது மணமக்களுக்குத் தங்கள் விளையாட்டுடன் அறிமுகப்படுத்திக் கொள்வதுடன் அவர்களுடைய வாழ்க்கை வளமுடன் இனிமை பொருந்தியதாக அமையட்டும் என்பதற்கு அறிகுறியாக, திரட்டுப்பாலுக்குப் பதிலாக வாழைப்பழத்தை தின்பதற்குக் கொடுக்கின்ற நிகழ்ச்சிதான் இது, காலப்போக்கில் வாழைப்பழத்தை மணமக்களின் வாயில் தடவி வேடிக்கையாகச் சிரித்து மகிழ்கின்ற நிகழ்ச்சியாக இன்று மாறியிருக்கிறது.

கணவனுக்குச் செய்யவேண்டிய இல்லறக் கடமைகளாகிய எண்ணெய் நீராடுதல், உணவு பறிமாறுதல் முதலியன மணநாளாகிய நல்ல நாளிலேயே தொடங்கப் பெறவேண்டும் என்ற எண்ணத்தில் மணமகனுக்கு எண்ணெய், சீயக்காய், தண்ணீர் முதலியவைகளை

மணமகள் அவனுடைய தலையில் தொட்டு வைப்பாள். அதே போல் மணமகனும் மணமகளுக்குத் தொட்டு வைக்கவேண்டும். பின்னர் மணமகன் எதிரில் ஒரு முக்காலி வைத்து அதன் மீது ஒரு சட்டியை வைத்து அதில் ஏற்கனவே சமைத்து வைத்துள்ள உணவுப் பொருட்களை மணமகள் பறிமாறவேண்டும்.

சோறு, பருப்பு, நெய், வாழைப்பழம் முதலியவை களைப் பறிமாறிய பின், மணமகன் அதை தொட்டுச் சுவை பார்க்க வேண்டும். பிறகு மணமகன் கை அலம்புவதற்கு மணமகள் நீர் ஊற்றவேண்டும். சில பகுதிகளில் இந்த நிகழ்ச்சி நடு வீட்டிற்குள் வாழை இலை போட்டு, மணமகளே மணமகனுக்கு உணவு பரிமாறி, அவன் உண்டு முடிந்ததும் அதே இலையில் மணமகள் உண்பதாக நடைபெறுகிறது. இது அவர்களிடையே உள்ளக் கலப்பினை ஏற்படுத்துவதற்காக அமைக்கப்பெற்ற நிகழ்ச்சியே ஆகும்.

மணமக்கள் இருவரும் தங்களுக்கு உரியதை ஒருவர்க்கொருவர் கொடுத்துப் பரிமாறிக் கொள்ள வேண்டும் என்ற பண்பினையும் மனப்பான்மையையும் காட்டும் அறிகுறியாக 'கொண்டை மாலை' மாற்றிக் கொள்வார்கள். மாமக்காரர்க்ள் இருவரும் மணமக்கள் தலைகளில் இந்தக் கொண்டை மாலையை மூன்று முறை மாற்றி மாற்றி வைப்பார்கள்.

மணமகளின் தந்தை, தன் மகளை மணமகன் வீட்டிற்கு அழைத்துச் செல்லும்போது வழிச்செலவுக ளுக்குக் கொடுக்கின்ற முதல் பணப் பரிசுதான் "தலைச்சீலையில் முடிதல்" என்ற நிகழ்ச்சி. இது பெரும்பாலும் தலைச் செலவிற்காக முடிதல் என்ற சொற்கள் தான் மருவி வந்திருக்கலாம் என எண்ணுகின்றேன். மணமகளின் தந்தை ஒரு சிறு தொகையை மணமகனின் தலையில் வைப்பார். அதனை எடுத்து மாமக்காரர் மணமகன் தந்தையிடம்

கொடுத்துவிடுவார். பின்னர் இந்தத் தொகை. மணமகளுக்குக் கொடுக்கின்ற ஸ்ரீதனப் பணத்துடன் சேர்த்துக் கொள்ளப் பெறும். இது பற்றிப் பின்னர் ஒரு கடிதத்தில் எழுதுகிறேன்.

மணமக்கள் முன் இருக்கின்ற முக்காலி மீது உள்ள சட்டியில் அரிசி, மஞ்சள், தேங்காய் இவைகளை வைத்து ஒரு பட்டுத் துணியினால் (இதனை நாம் மாமபட்டு என்று சொல்லுகிறோம்.) இரு மாமக்காரர்களும் மூடினாற்போலப் பிடித்திருக்க, மணமக்கள் இருவரும் அதை எடுத்து மூன்று முறை மாற்றிக் கொள்ளவேண்டும். அப்போது மணமகளின் தந்தை மணமகனுக்கு ஒரு மோதிரம் அணிவிப்பார்.

பல இலக்கியங்களில் பேசப்படுகின்றதும், திருமணத்திலேயே மிக முக்கியமானதுமான "பாணிக் கிரஹணம்" என்ற நிகழ்ச்சியைத்தான் இந்த நிகழ்ச்சி மூலம் கடைப்பிடித்து வந்திருக்கின்றனர். மணமகளின் தந்தை, அவள் கையைப் பிடித்து மணமகன் கையில் ஒப்படைப்பதே "தாரை வார்த்தல்" என்று பேசப்படுகின்ற உயரிய நிகழ்ச்சி.

பட்டுத் துண்டு போர்த்திய நிலையிலேயே மணமக்கள் இருவரும் எழுந்து, அரசன் ஆணைக்காலையும், அக்கினியையும் சுற்றி வலம் வந்து, நடு வீட்டில் சென்று அமர வேண்டும். மாமக்காரர் அந்தப் பட்டுத் துணியை விலக்கிய பிறகு, அந்தப் பொருட்களை அங்கு வைத்துவிட்டு எழுந்து வெளியே வரவேண்டும்.

### மொய் எழுதுதல்:

மொய் என்றால் நெருங்கிய உறவினர்கள் என்ற பொருள். மணவறை நிகழ்ச்சிகள் நடைபெற்றுக் கொண்டிருக்கும் போதே, மணக்களின் பங்காளிகள் சிலர், தனித்தனியே அமர்ந்து கொண்டு ஒருமுக்காலியின் மீது சட்டி வைத்து, அதில் பால் கொஞ்சம் விட்டு,

வெற்றிலையைக் கிள்ளிப் போட்டு, அதன் முன்னிலையில் ஒரு நோட்டுப் புத்தகத்தில், (முன்பெல்லாம், ஏறத்தாழ 15, 16 ஆண்டுகட்கு முன்பு வரை ஓலைச் சுவடியில் எழுத்தாணி கொண்டு எழுதி வந்திருக்கின்றனர்.) சங்கு ஊதி, முதன் முதலில் மணமக்களின் தந்தைக்குத் தந்தை (ஐயா) பெயரை எழுதி, மொய்ப்பணம் என்று ஒரு தொகை எழுதுவார்கள். பிறகு உற்றார், உறவினர், பங்காளிகள் பெயர்களை எல்லாம் கூறி மொய் எழுதுவார்கள். மறுபடி சங்கு ஊதி, மாமக்காரருடைய "மாமப் பணம்" என்று அவரவர்கள் தகுதிக்கு ஏற்ப 501, 1001, 10,001 பணம் என்று எழுதித் தொகையைக் கொடுப்பார்கள். (பணம் என்பது நயாபைசா வழக்கத்திற்கு வருமுன் இரண்டணா, இப்போது பதின்மூன்று காசுகள்) இப்படி எழுதியதை மணமக்களுடைய தாயார்களுக்கு விவரம் சொல்லி, ஒரு சிறு பட்டுத்துணியில் வைத்து முடிந்து ஒரு தாம்பாளத்தில் மலர், வெத்திலை, பாக்கு, எலுமிச்சம்பழம் இவற்றுடன் வைத்து மணமகனும், மணமகளுக்குத் தந்தையும் தனித்தனியே அவரவர்களுடைய உறவினர்களிடமும் பெரியவர்களிடமும் கொடுத்து வணங்கி வாங்கிக் கொள்வார்கள். பெரியவர்களிடம் இவர்கள் வணங்கி வாங்கிக் கொண்ட பின்னர். இளையவன் ஒருவன் இவர்களை வணங்க, இருவரும் சேர்ந்து அநத் மொய்ப்பண முடிச்சை நடுவீட்டில் திருவிளக்கின் முன் வைத்துப் பிறகு எடுத்துக் கொள்வார்கள்.

தம்பி! இன்னும் கொஞ்சம் பாக்கி இருப்பதை நாளைய கடிதத்தில் தொடர்கிறேன்.

அன்புடன்

அண.



9

அன்புள்ள எழில் !

நலம், நலமே விளைக!

மணவறை நிகழ்ச்சிகளைப் பற்றி எழுதிய என்னுடைய முன் கடிதத்தில் குறிப்பிட்டிருந்தேன்; பட்டுப் போர்த்திய நிலையில் அரசன் ஆணைக்கால், அக்கினி முதலியவைகளை வலம் வந்து நடுவீட்டுக்குள் செல்வார்கள் என்று. அப்படிச் செல்லும்போது, மணைக்கும் நடு வீட்டுக்கும், நடுவில் வழியில் அமைந்துள்ள 'விதைக் கோட்டை'யை (இது குறித்து ஏற்கனவே விளக்கம் தந்துள்ளேன்) மணமக்கள் இருவரும் தாண்டிச் செல்லவேண்டும். நம் வாழ்க்கை வளமுடன் இருப்பதற்காக, என் குலத்தொழிலாகிய "கொண்டு விற்ற"லுக்குத் தொலைதூரம் சென்று பொருள் தேடி வந்து உன்னைக் காப்பாற்றுவேன் என்ற உறுதியை எடுத்துக்காட்டுவதே இந்த 'விதைக்கோட்டை' தாண்டுவதின் உட்கருத்தாகக் கொள்ள வேண்டும்.

நடுவீட்டிலிருந்து வெளியே வந்ததும் மணமக்கள் இருவரும் நடுவாசலில் வந்து நின்று கொண்டு, பெற்றோர்,சுற்றத்தார், உற்றார், உறவினர், சான்றோர் எல்லோரும் ஒவ்வொருவராக அவர்கள் முன் வந்து நிற்க, அவர்களை கீழே விழுந்து வணங்கி வாழ்த்துப் பெற்றுக்கொள்வார்கள். இதனை நாம் "கும்பிட்டுக் கட்டிக்கொள்ளுதல்" என்று சொல்கிறோம். பெற்றோர் களையும், பெரியவர்களையும் வணங்கி (கும்பிட்டு)

அவர்களுடைய வாழ்த்துக்களைப் பெற்றுக் கொள்ளுதல் (கட்டிக் கொள்ளுதல்) என்பதே இதன் பொருள். இத்துடன் மணவறைச் சடங்குகள் முழுமை அடைகின்றன. இனிச் சீராட்டுதல் கொடுத்தல் என்ற நிகழ்ச்சி.

### சீராட்டுக் கொடுத்தல்:

தன் மகளுக்கு அவள் தகப்பனாரும் அவருடைய சகோதரர்களும் தருகின்ற பணந்தான் சீராட்டு எனப்படும். மணமகனை மணையில் உட்காரச் செய்து, வள்ளுவப்பையில் (வள்ளுவன் என்றால் வரும் பொருள் உரைப்பவன். இந்தப் பையை மணமகனின் தோழன் ஒருவன் மாப்பிள்ளை அழைப்பு முதல் பெண் அழைத்துக் கொண்டு செல்லும் நிகழ்ச்சி வரை, மணமகனுடன் கூடவே கொண்டு வருவது வழக்கம். அந்தத் தோழன் மணமகனுக்கு வாழ்க்கையில் வர இருக்கின்ற காரியங்களை எல்லாம் முன் கூட்டியே எடுத்துச் சொல்லும் உற்ற தோழனாகக் கருதப் பெறுவதால், வள்ளுவப்பை நம் திருமண நிகழ்ச்சியில் இடம் பெற்றிருப்பதை அறிக, மாப்பிள்ளை அழைப்பிலிருந்து பெண்ணழைப்பு வரை மணமகனுடன் கூடவரும் இந்த வள்ளுவப்பைக்கு இன்னும் ஒரு சிறப்பு இருப்பதையும் இங்கு சுட்டிக் காட்ட விழைகிறேன். 'வரைவிடை வைத்துப் பொருள் வயிற்பிரிதல்' என்பது ஒரு அகத்திணை மரபாகும். தான் காதலித்த பெண்ணை மணப்பதற்குத் தானே பொருள் தேடி வந்து மணக்கவேண்டும் என்பது பழங்காலச் சமுதாயப் பழக்கம். அங்ஙனம் பொருள் சேர்த்து வந்ததற்கு அடையாளமாகத் தான் நம் திருமணங்களில் இந்த 'வள்ளுவப்பை' இடம் பெற்றிருக்கவேண்டும் என்றும் கொள்ளலாம். இதில் கொஞ்சம் பாக்கு, மஞ்சள், எழுத்தாணி முதலியவைகளை வைத்திருப்பார்கள்) ஒவ்வொரு பெயராக பக்கத்தில் ஒருவர் இருந்து படிக்க, மணமகளின் தந்தை ஒவ்வொரு

பெயருக்கும் ஒவ்வொரு பிடி பாக்கு போடுவார்கள். பிறகு பெண்ணழைத்த வீட்டில் இந்தச் சீராட்டுக்காக ஒரு தொகை கொடுத்துவிடுவார்கள். இப்படி பிடி பாக்கு வள்ளுவப்பையில் போட்டதும், அதைக் கட்டி முடிந்து, தாம்பாளத்தில் வைத்து, பெரியவர்களிடம் கொடுத்து வணங்கிப் பெற்றுக் கொள்வார் மணமகன். பிறகு இளையவன் ஒருவன் மணமகனை வணங்க, இருவரும் கொண்டு போய் அதை நடுவீட்டில் வைத்துவிட்டு வருவார்கள், இதன் பிறகு "மஞ்சள் நீராடுதல்" என்ற நிகழ்ச்சி நடைபெறும்.

**மஞ்சள் நீராடுதல்:**

தம்பி! திருமணத்திற்கு இரண்டு மூன்று நாட்களுக்கு முன்பிருந்தே அதிக்மான வேலைகளில் ஈடுபட்டிருப்பதால் மணமக்கள் உடற்சூட்டுடன் இருப்பதற்கான வாய்ப்பு உண்டு. திருமணம் செய்துகொள்ளும் மணமக்கள் உடற்சூட்டுடன் உடலுறவு கொள்ளக்கூடாது என்று நுண்ணிய கருத்தை மனதில் கொண்டு, அவர்களுடைய உடற்சூட்டைத் தணிப்பதற்காகவே, எண்ணெய் நீராட்டி வந்திருக்கின்றனர். மணமக்கள் இருவரும் நல்ல உடைகளைக் களைத்துவிட்டு, வேறு உடைகள் அணிந்து கொண்டு, நடுவாசலில் ஒரு பலகை மீது அமர்வார்கள். உள்ளூர் நகரச் சிவன் கோயில் வயிராவி ஒருவர் மணமகனுக்கு எண்ணெய் தேய்த்து விடுவார். இதுபோல மணமகளின் உறவினர்களில் ஒருத்தி மணமகளுக்குத் தேய்த்து விடுவார். இருவரும் குளித்ததும், மணமகனுக்கு மாமனார் கொடுக்கும் புதுத்துணிகளையும், மணமகளுக்கு அவள் மாமியார் கொடுக்கும் புதுத் துணிகளையும், அணிந்து கொள்வர். எண்ணெய் தேய்த்துக்கொள்ளுதல் என்பது பெரும்பாலும் இப்போது பாவனையிலேயே நடைபெறுகிறது. இங்ஙனம் நீராடும்போது, தண்ணரீரில் மஞ்சளைக் கரைத்து மணமக்களின் தந்தையார் இருவரும்

(இப்போது ஒருவருக்கொருவர் மைத்துனர் முறையாகி விடுகிறார்கள் அல்லவா!) தங்களுடைய ஆடையின் நுனிகளை நனைத்துக் கொள்வார்கள். இதுபோல மணமக்களின் தாயாரும், சகோதரர்களும் நனைத்துக் கொள்வதுண்டு. புதிய ஆடைகள் அணிந்து கொண்டதும், மணமகள் வீட்டுப் பெரியவர்கள் அல்லது அத்தை "நீராலாத்தி" எடுப்பார்கள்.

தம்பி! நீராலாத்தி என்பது பற்றிய விளக்கம் பிறிதொரு கடிதத்தில் எழுதுகிறேன், இதன் பிறகு "காப்புக் கழற்றி கால் மோதிரம் இடுதல்" என்ற நிகழ்ச்சி நடைபெறும்

## காப்புக் கழற்றிக் கால்மோதிரம் அணிதல்

தம்பி! மணமகனின் தாயார் மணமகளுக்குத் தன் கையில் அணிந்துள்ள காப்பைக் கழற்றி அணிவிப்பதாகப் பலரும் தவறாக எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். மாப்பிள்ளைக்கும் பெண்ணிற்கும் தொடக்கத்தில் பகவத்யானம் செய்யும்போது மாமக்காரர்களால் கட்டுவிக்கப் பெற்ற காப்பை (காப்புக் கட்டுதல் என்ற தலைப்பை மீண்டும் படித்துப் பார்க்கவும்.) அவிழ்த்து விட்டு, பெண்ணிற்கு வெள்ளியினால் ஆன மோதிரம் (இதனை நம்மவர்கள் 'மிஞ்சி' என அழைக்கிறோம்.) ஒரு விரலுக்கு மூன்று வீதம் இரண்டு கால்களிலும் இரண்டாவது விரலில் மணமகனின் தாயார் அணிவிப்பார்கள். இதனைத் தொடர்ந்து நாணாளைச் சடங்கு நடைபெறும்.

## நாணாளைச் சடங்கு:

தம்பி! நாணாளை என்ற சொல்லுக்கு என்ன பொருள் என்பதே பெரும்பாலோர்க்குத் தெரியவில்லை. நான் பலரையும் கேட்டேன். முன்காலத்தில் மணமகளின் தந்தை மகனுக்கு எழுதிக் கொடுத்த ஸ்ரீதன உண்டியலில் ஒரு வாசகம் காணப்பட்டது. "நான்கு நாள் கணக்குப்

பார்த்து" என்ற வரிகள் இதற்கு ஆதாரம். நாலு நாள் என்ற சொல்தான் "நாணாள்" என்று மாறியிருக்கவேண்டும். நம்மில் சிவகாமி என்ற பெயர் "சோயி" என்றும், அலர்மேலு என்ற பெயர் "அலமி" என்றும் மாறவில்லையா? அதுபோலத் தான் இதுவும் மாறியிருக்கவேண்டும். இந்தச் சடங்கில் மணமக்களுக்கு முன்பு கட்டிய காப்பை அவிழ்த்து மணமகனுக்கு மோதிரம் இட்டவுடன், சடங்கு செய்து கொள்வதுதான் முக்கியம், திருப்பூட்டிய பிறகு செய்து கொள்ளும் சடங்கைப் போலத்தான் இதுவும், திருமணம் முடிந்து, புகுந்த வீட்டுக்கு வருகின்ற நீ எல்லாப் பேறுகளும் பெற்று மகிழ்வோடு வாழ வேண்டும் என மாமியார் வாழ்த்துவதே இந்தச் சடங்கின் உட்பொருள், இதன்பின்னர் "பிள்ளை எடுக்கிக் கொடுத்தல்" எனும் நிகழ்ச்சி.

### பிள்ளை எடுக்கிக் கொடுத்தல்:

வெள்ளியினால் செய்த ஒரு குழவியை, ஒரு சிறு பட்டுத்துணியில் வைத்து, தான் மகப்பேறு பெற்றுவிட்ட தாகவும் அதனை வாழ்த்தித்தர வேண்டும் என்று ஐயா, தந்தை வகையறாவிடம் (வீட்டுக்குப் பெரியவர்களிடமோ அல்லது அவரவர்கள் வழக்கப்படி ஒன்றோ அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட நபர்களிடமோ) கொடுத்து அவர்கள் காலில் விழுந்து வணங்கிக் கொள்ள வேண்டும். இதன் பிறகு "பெண் சொல்லிக் கொள்ளுதலும்" "குடி அழைப்பும்" நடைபெறும்.

### பெண் சொல்லிக் கொள்ளுதலும் குடி அழைப்பும்:

திருமணத்தன்று மாலையில் ஒரு நல்ல நாழிகையில் (நேரம்) மணமகள், நடுவீட்டுக்குப் பக்கத்தில் உள்ள பத்தியில் விரித்திருக்கும் பாய் ஒன்றில் கிழக்கு முகமாக கையில் வெத்திலை பாக்குடன் வந்து நிற்க வேண்டும். மணமகளின் பெற்றோர், சுற்றத்தார், உறவினர்கள் ஒவ்வொருவராக வந்து அந்தப் பாயின் மீது நிற்க,

அவர்களிடம் வெத்திலை பாக்கைக் கொடுத்து, அவர்கள் காலில் விழுந்து வணங்கி, "சென்று வருகிறேன்" (என் கணவர் வீட்டுக்குச் சென்று வருகிறேன்) என்று சொல்லி விடை பெற்றுக் கொண்டதும் மணமக்கள் இருவரும் நடுப்பத்தியில் கோலத்திற்கு முன் வந்து நிற்பார்கள்.

மணமகளுக்கு ஆயாள் வந்து ஸ்லேட் விளக்கு வைத்து அழகு, ஆலாத்தி எடுத்து, மணமக்கள் இருவருக்கும் திரு நீறு இட்டு, கட்டுச் சோற்றுடன் வழியனுப்பி வைப்பார்கள்.

தம்பி! இந்த அழகு ஆலாத்தி பற்றிய விளக்கம் முன் பொரு கடித்தில் எழுதியிருந்தேன். இந்தக் கடிதத்தின் தொடக்கத்தில் "நீராலாத்தி" பற்றிக் குறிப்பிட்டிருந்தேன். நீராலாத்தி என்பது, ஒரு சிறிய தாம்பாளத்தில் கொஞ்சம் தண்ணீர் விட்டு, அதில் மஞ்சள் தூளையும் சுண்ணாம்பையும் கலந்து, வெத்திலையை கிள்ளிப் போட்டிருப்பார்கள். இது செந்தூர நிறத்தில் இருக்கும். மணமக்கள் பலராலும் பார்க்கப் பெறுகின்ற நிலையில் இருந்து வந்தமையால் கண்ணேறு பட்டிருக்குமென்று ஆலத்தி எடுப்பதன் மூலம் கண்ணேறு கழித்தல்தான் ஆலத்தி அல்லது ஆரத்தி என்று கொள்ள வேண்டும். இங்ஙனம் ஆலத்தி எடுத்த பின்பு, மங்கல வாத்தியம் முழங்க மணமக்களை, மாமக்காரர்களுடன் ஒரு காரில் (முன் பெல்லாம் கார் இல்லாத காலம், எனவே மாட்டு வண்டி யில்தான் செல்வது வழக்கம்) கூட்டி அனுப்புவார்கள். மணமகனுடைய ஊருக்குச் செல்லும் வழியில் ஒரு ஊருணிக் கரையில் இறங்கி, கட்டுச் சோறு சாப்பிட்டு விட்டு, மணமகன் வீட்டு உறவினர் ஒருவர் வீட்டிலோ அல்லது பங்காளி ஒருவர் வீட்டிலோ தங்கி இருப்பார்கள். இதுவே குடியழைப்பு என்று சொல்கின்றோம்.

பிற, என் அடுத்த கடிதத்தில்.

அன்புடன்

அண

# 10

**அன்புள்ள எழில்!**

நலம், நலமே விளைக!

என்னுடைய முந்திய கடிதங்களை எல்லாம் கவனமாகப் படித்து வருகிறாய் என நினைக்கிறேன்.

மணமக்களை குடியழைப்பு என்ற நிகழ்ச்சியின்மூலம் வழியனுப்பி வைத்ததும், மணமகனின் பெற்றோர்கள் அவர்களுடைய உற்றார், உறவினர் எல்லோரும் விடை பெற்றுச் சென்று விடுவார்கள். பிறகு மணமகளின் தந்தைக்கு பங்காளிகளில் சிலபேர் அரசன் ஆணைக் காலை அவிழ்த்து விட்டு, அரிமணம் செய்த முளைப் பாலிகையை ஒரு சட்டியில் சேர்த்து எடுத்து ஒரு பட்டுத் துணியால் மூடி சங்கு ஊதிக் கொண்டு, அதைக் கொண்டு போய் ஊருணியில் செலுத்தி வந்து, அவர்களும் விடைபெற்றுச் சென்றுவிடுவார்கள். இதன் பிறகு மணமகளுக்குத் தந்தை அவர்களுடைய உறவினர்களை அழைத்துக்கொண்டு மணமகனின் ஊருக்குச் சென்று 'பெண் அழைத்து' விடவேண்டும். பெண் அழைத்துச் செல்ல மணமகன் வீட்டு உறவினர்கள், உற்றார் மேள வாத்தியங்களுடன் வரும்போது, ஒரு சட்டியில் பாக்கு, மஞ்சள், இரண்டு தேங்காய்கள் வைத்து அவர்கள் வீட்டுப் பெரியவர்கள் கொண்டு வருவார்கள். மணமகளின் தாயார் பாலும் பானையும் (ஒரு செம்பில் கொஞ்சம் பால், கெண்டிச் செம்பு) கொண்டு வருவார்கள்.

## பெண் அழைப்பு :

மணமகள் வீட்டின் திருமணம் முடிந்து விடைபெற்று வந்த வீட்டுப்பெண்டிர், மணமகன் வீட்டு வாசலில் பெண்ணழைத்த பொங்க்ல் என்று பொங்கல் இட்டு, மூன்று இடங்களில் படையல் செய்து அந்த இலைகளுக்கு முன் மூன்று தவலைகள் வைத்து, ஒன்றில் 'குலம் வாழும் பிள்ளை'யும் மற்றொன்றில் எழுத்தாணியும், இன்னொன்றில் தண்ணீர் கொஞ்சம் இட்டும் வைத்திருப்பார்கள். மணமகள் வீட்டிலிருந்து எல்லோரும் மேளவாத்தியங்களுடன் வந்து மணமக்களை ஊர்வலமாக மணமகன் வீட்டுக்கு அழைத்துச் செல்வார்கள். இந்த நிகழ்ச்சியும் ஊர் மக்களுக்கு என் வீட்டிற்கு வந்திருக்கின்ற மருமகள் இவள்தான் என்று அறிமுகப்படுத்துகின்ற எண்ணத்தில்தான் ஏற்பாடு செய்துள்ளனர் என்று கொள்ள வேண்டும். ஊர்வலமாக வந்து, மணமகன் வீட்டிற்கு வந்ததும், நடுப்பத்தியில் கோலத்திற்கு முன்பாக நிற்க வைத்து, மணமகனுக்கு அப்பத்தாள் (தகப்பனாரின் தாயார்) அழகு ஆலத்தியும், பிள்ளையார் ஆலத்தியும் எடுத்து திருநீறு பூசி, அழைத்துக் கொண்டு, அங்கு படையல் செய்து வைத்திருக்கும் இலைகளுக்கு நான்கு திசைகளிலும் நிறுத்தி, முதலில் கிழக்கு திசையில் நிறுத்தி, மணமகளுக்கு, மணமகனின் தாயார் சடங்குத் தட்டை வைத்துக்கொண்டு திருப்பூட்டியதும் நடத்திய சடங்கு போல பெண்ணழைத்த சடங்கு செய்தும், மற்ற திசைகளில் சாதாரணமாக வெத்திலையில் நீர் விட்டுச் செய்கின்ற சடங்கு செய்த பின், மணமக்கள் இருவரும் மூன்று தவலைகளிலும் கைவிட்டு, குலம் வாழும் பிள்ளையை மணமகன் எடுத்து மணமகள் கையில் கொடுத்துவிட்டு, மற்றொரு தவலையில் உள்ள எழுத்தாணியைத் தான் எடுத்துக்கொள்ள வேண்டும். மணமகன் எடுத்துத் தருகின்ற குலம் வாழும் பிள்ளையை மணமகள் வாங்கித் தன் இடுப்பில் சொருகிக் கொள்ள

வேண்டும். இப்படி எடுத்தபின் மணமக்கள் இருவரும் நடுவீட்டில் சென்று அமர்ந்து வெளியே வர வேண்டும். பிறகு மணமக்கள் பால் பழம் சாப்பிடுவார்கள். கோயில் வீட்டில் சென்று வணங்கி வருவதும் சில வட்டகைகளில் நடைபெறுவதுண்டு.

"குலம் வாழும் பிள்ளை"யை எடுப்பது, 'நீ குடும்பத்தின் தலைவியாவதுடன், மகப்பேறு அடைய இருக்கிறாய். எனவே குடும்பப் பொறுப்பு அறிந்து நடந்து கொள்ள வேண்டும்' என்றும், எழுத்தாணி எடுப்பது "நான் இன்று முதல் குடும்பத் தலைவனாக ஆகின்ற காரணத்தால் தேடிய பொருளை எண்ணியும் எழுதியும் வரவறிந்து செலவு செய்வேன்" என்பதையும் நினைவூட்டுவதாக அமைந்திருப்பதை உற்று நோக்குக. இந்த நிகழ்ச்சி சில வட்டகைகளில் மணமகள் வீட்டில் மணவறைச் சடங்குகளில் ஒன்றாகவும் நடைபெறுகிறது.

பிறகு மணமகளின் தந்தை தன் மகளுக்குத் தருகின்ற ஸ்ரீதனப் பணத்திற்கு உண்டியல் எழுதி, அதற்குள்ள தொகையை மணமகனின் தந்தையார் கடையிலோ அல்லது தெரிந்தவர்களுடைய கடையிலோ நல்ல வட்டிக்குக் கொடுத்துப் பெருக்கிப் பிறகு, தேவையான போது மணமகனிடம் கொடுப்பது வழக்கம். ஆனால் இப்போதெல்லாம் ஸ்ரீதனப் பணத்திற்கு உண்டியல் எழுதி, உடனே செல் வைத்துப் பணத்தைக் கொடுத்து விடுகிறார்கள். பிறகு மறுநாள் நல்ல வங்கிகளிலோ அல்லது கம்பெனிகளிலோ பணத்தை வட்டிக்குப் போட்டு வைக்கிறார்கள். உண்டியல் என்பது பணம் கொடுக்கல் வாங்கலுக்காக ஏற்கப்பட்ட அத்தாட்சியே (ரெக்கார்டு). தம்பி! நாம் திருமணங்களில் எழுதிக் கொடுக்கின்ற உண்டியலின் மாதிரியும், செல் வைக்கின்ற விவரமும் கீழே தந்துள்ளேன்.

## உண்டியல்

உ
சிவமயம்

.............. ஆண்டு .................. மாதம் ....................தேதி (சரியான ஆங்கிலத் தேதி) .................... (இன்னஊர்) .................... (இன்னார் மகன்) .................... (இன்னார்) பற்று .............. (இன்ன ஊர்) ................. (இன்னார் மகன் அதாவது மணமகன்)க்கும் அவர் மனைவி .................... (மணமகள்) வரவு நாளது தேதியில் திருமணம் செய்து கொண்டபோது நாலு நாள் கணக்குப் பார்த்து ஸ்ரீதனமாகக் கொடுத்தது ரூபாய் ...................../- (ரூபாய் எழுத்தால்)யும் தலைச் சீலையில் முடிந்தது ரூபாய் ................./-ம் ஈடு பொன்னுக்காக* தந்தது ரூபாய் .............../-ம் ஆக ரூபாய் ................/- (எழுத்தால்)யும் வருடம் ஒன்றுக்கு வட்டி ரூபாய் ................/-ம் சேர்த்துக் கூடிய அசலும் வட்டியயும் தந்து இதைச் செல்லுடன் வாபஸ் பெற்றுக் கொள்வேனாகவும்

ஒரு ரூபாய் ரெவின்யு ஸ்டாம்பில்
மணமகளின் தந்தையின் கையொப்பம்.

உடனே அந்த உண்டியலின் பின்புறம்

இந்த உண்டியலில் கண்டபடி ரூ............./-ம் நாளது தேதி வரை வட்டிக்காக ரூ................../-ம் ஆக ரூபாய்..........ம் பெற்றுக்கொண்டு இதில் செல் வைத்துக் கொடுத்துள்ளோம்.

மணமக்கள் இருவரின்

கையொப்பம்

---

* ஈடு பொன் என்பது மணமகன் வீட்டார் திருமாங்கல்யத்திற்காக தருகின்ற பணம்.

இப்படி உண்டியல் எழுதி, செல் வைத்து, அந்த உண்டியலையும் அதற்குண்டான ரொக்கத்தையும், ஒரு தாம்பாளத்தில் மலர், மஞ்சள், எலுமிச்சம்பழம் முதலியவற்றுடன் வைத்து, மணமக்களின் தந்தையார், பெரியவர்கள் முதலியவர்களிடம் மணமகன் கொடுத்து வணங்கிப் பெற்றுக்கொள்ள வேண்டும். பிறகு எல்லோருக்கும் விருந்தளித்தபின், மணமகள் வீட்டார் எல்லோரிடமும் சொல்லிக்கொண்டு செல்வார்கள், அப்படிச் செல்லும் போது மணமக்களை "நீச்சோறு" (நீர்ச்சோறு என்பதுதான் நீச்சோறாக மருவி விட்டது) சாப்பிட, அதாவது முதல் வழிக்கு (மாமனார் வீட்டுக்கு முதன் முறையாக) அழைத்துச் செல்வார்கள்.

தம்பி! ஒரு திருமணம் என்பது எப்போது முழுமயடைகிறது? தாலி கட்டினால் மட்டும் கூட ஒரு இந்துத் திருமணம் சட்டப்படியோ, சம்பிரதாயப்படியோ முழுமை அடைவதில்லை, தாலி கட்டி முடிந்து, அக்கினி முன் வலம் வந்து "சப்தபதி" என்ற சடங்கு முடியவேண்டும். தம்பி! இந்தச் சடங்கைத்தான் நாம் திருப்பூட்டி முடிந்தவுடன், மணமக்கள் இருவரும் கைகோர்த்துக் கொண்டு அரசன் ஆணைக்காலையும் அக்கினியையும் சேர்த்து வலம் வரும் போது செய்கிறோம். அங்ஙனம் வலம் வரும்போது புரோகிதர் மந்திரங்களை ஓதுகிறார். அவர் ஏதோ சொல்கிறார் என்று தெரிந்து கொள்ளாமலேயே இருந்து விடுகிறோம். வேத விற்பன்னர்களை அணுகி, இந்த மந்திரங்களையும் அதற்குண்டான விளக்கங்களையும் கேட்ட போது, நான் தெரிந்து கொண்டவற்றை கீழே அப்படியே தருகிறேன்.

1. ஏகமிஷே விஷ்ணுஸ்த்வான் வேது.

முதல் அடியை வைக்கும்போது எனக்கு உணவு குறைவில்லாமல் கிடைக்க இறைவன் தொடர்ந்து வருவார்.

2. த்வே ஊர்ஜே.

இரண்டாம் அடியில் உடல் நலத்துக்கு அருள் புரிவார்.

3. த்ரீனி விரதாயா.

மூன்றாவது அடியில், செய்ய இருக்கும் எல்லாக் காரியங்களுக்கும் துணை இருப்பார்.

4. சத்வாரி மாயோ பவயா.

நான்காவது அடியில், சிறந்த வாழ்வைக் கொடுப்பார்.

5. பஞ்ச பசுப்யஹா.

ஐந்தாவது அடியில், பசு வர்க்கத்தால் நல்ல பலன் கிட்ட அருள் புரிவார்.

6. ஷட் ருதுப்யஹா.

ஆறாவது அடியில், எல்லாக் காலங்களிலும் எல்லா உதவிகளும் செய்ய அருள் புரிவார்.

7. சப்த சப்தேப்யோ ஹோத்ராப்யோ விஷ்ணு திவான் வேது,

ஏழாவது அடியில், தான் செய்யப் போகும் எல்லாக் காரியங்களிலும் அவை பூரணமாக நடக்கத் தொடர்ந்து அருள் புரிவார்.

தம்பி! இந்த விளக்கங்களைக் கேட்டதும், நம் சமூகத்தவர்களும் இந்த நிகழ்ச்சியை மிக நுண்ணிய கருத்தில் மணமக்கள் கைத்தலம் பற்றி அக்கினியை வலம் வரும் போது புரோகிதர்களைக் கொண்டு, சம்பிரதாயத்தை விடாமல் கடைப்பிடித்து வந்திருப்பதை உற்றுணர வேண்டும். தம்பி! இந்த சப்தபதி நிகழ்ச்சி பற்றி நம்முடைய கவிஞர் கண்ணதாசன் அவர்களின் கவிதை ஒன்றினையும்

 கிளிவாதாசன்

இங்கே நினைவு கூர்வது மிகப் பொருத்தமாக இருக்கும் என நினைக்கிறேன்.

ஓரடி கணவர்க்காக, ஓரடி கடவுட்காக,
சீரடி மூன்றாம் பாதம் இணைந்ததோர் குலத்தைக் காக்க!
நாலடி அச்சம் மடம் நாணம் எனும் நலத்தைக் காக்க!
ஐந்தடி புலன்கள் ஐந்தும் அடக்கியே வாழ்வைக் காக்க!
ஆறடி சுவைகள் ஆறும் கணவர்க்கே அன்பில் ஊட்ட!
ஏழடி உலகம் ஏழும் கணவனோ டிணைந்து வாழ்க!

சப்தபதி சத்தியம்
தர்மகுல தத்துவம்

சக்தியொரு பாதியாய் சிவனுமொரு பாதியாய்
தர்மத்தில் இணைந்து வாழ்வோம்
சக்திவழி நேர்மையாய் பண்புவழி மேன்மையாய்ப்
பாரெலாம் வணங்க வாழ்வோம்!
பள்ளியறை கொள்வதில் பரமனடி சேர்வதில்
பக்கத்தில் பங்கு கொள்வோம்!
பாதாதி கேசமும் சீரான நாயகன்
பளிச்சென்று துணைவி வாழ்க!
படுவதொரு துயரேனும் வருவதொரு சுகமேனும்
பாதியாய்த் துணைவன் வாழ்க!
தாய்வீடு விட்டபின் தன்வீடு தாய்வீடு
என்றெண்ணியே தலைவி வாழ்க!
சமகாலயோகமிது வெகுகால யாகமென
சம்சாரம் இனிது வாழ்க"

இந்தக் கால இளைஞர்கட்கெல்லாம் தத்துவப் பாடல்கள்ளையும் பிறமொழிச் சுலோகங்களையும் கூறுவதை விடத் திரைப்பாடலை உவமை காட்டினால் எளிதில் புரியும் அல்லவா? இதையே 1955ம் ஆண்டு இந்துத் திருமணச்சட்டம் நம்பர் 25 செக்ஷன் 7ல் வலியுறுத்துகின்றது.

Section 7 of No.25 of HINDU MARRIAGE ACT 1955.

"A Hindu marriage may be solomnised in accordance with the customary rites and ceremonies of either Party thereto. Where such rites and ceremonies include the "SAPTAPADI" (that is the taking of seven steps by the bridegroom and the bride jointly before the sacred fire) the marriage becomes complete and binding when seventh step is taken".

நம் சமூகத்தினர் திருமண நிகழ்ச்சிகளில் கடைப்பிடித்து வந்திருக்கின்ற சடங்குகள் வெறும் சம்பிரதாயத்திற்கோ அல்லது ஆடம்பர ஆரவாரங்களுக்கோ அல்லாமல் காரண காரியங்களுடன் வைத்திருப்பதை எண்ணிப் பெருமைப்பட வேண்டும்.

தம்பி! முன்பெல்லாம் ஏறத்தாழ 1913 வரை நம் திருமணங்கள் 9 நாட்களிலும் 1924 முதல் 6 நாட்களிலும், 1933 முதல் 5 நாட்களிலும் பிறகு 1943 முதல் 4 நாட்களிலும் 1952 முதல் 3 நாட்களிலும், 1968 முதல் ஒரே நாளிலும் நடைபெற்று வந்திருக்கின்றன. நாட்கள் அதிகமாக இருந்த காலங்களில் ஒவ்வொரு நிகழ்ச்சியும் ஒவ்வொரு நாளில் நடத்தியும், நாட்கள் சுருங்கச் சுருங்க பல நிகழ்ச்சிகளையும் ஒதுக்கிவிட்டு, இப்போது ஒரே நாளில் முக்கியமான சடங்குகளையும் நிகழ்ச்சிகளையும் மட்டுமே நிகழ்த்தி வருகிறோம். அங்ஙனம் முன்னர் நாம் நடத்திவந்த நிகழ்ச்சிகளில் எதை எதை நீக்கி விட்டோம் என்றும், அவைகளின் விளக்கங்களையும் எனது அடுத்த கடிதத்தில் எழுதுகிறேன்.

அன்புடன்

அண

# 11

**அன்புள்ள எழில் !**

*நலம், நலமே விளைக!*

முன்பொரு கடிதத்தில் இந்தக் கழுத்து உரு கோர்ப்பது என்பது ஒரு பெரிய கலை என்றும் அதுபற்றி விளக்கமாகப் பின்னர் எழுதுவதாக எழுதியிருந்ததை நினைவு செய்து, அதைப் பற்றி எழுதும்படி நீ எழுதிய கடிதம் வந்து சேர்ந்து மிகவும் மகிழ்ந்தேன்.

திருமணத்திற்கு முதல் நாள் மணமகன் வீட்டில் இரு பெரியவர்கள் 21 பாகம் வெள்ளை நூலை (இது பெரும்பாலும் கடைகளில் கிடைக்கின்ற "0" மார்க் அல்லது நங்கூரம் மார்க் நூல்கண்டாக இருக்கும்.) எடுத்து, அதை மூன்றாக மடித்து, ஒரு மடிப்பிற்குள் (வளையம்) இன்னொரு நுலைக் கொடுத்து வாங்கிச் சங்கிலிப் பின்னல் போல் பின்னி, நன்றாக இறுக்கமாக முறுக்கேற்றுவார்கள். அதில் மஞ்சள் கிழங்கை தண்ணீரில் நனைத்துக் கொண்டு அழுத்த மாகத் தேய்ப்பார்கள். நூலில் நன்றாக மஞ்சள் ஏறியவுடன் பார்த்தால் முறுக்கு விடாமல் இருக்கும். இப்படிக் கிடைப்பது 7 பாகமாக இருக்கும், அதை இரு பாகமாக எடுத்துக் கொண்டு கீழ்க்கண்டபடி 31 உருப்படிகளைக் கோர்ப்பார்கள்:

| | | | |
|---|---|---|---|
| மேல்பாகம் : | திருமாங்கல்யம் | 1 | |
| | ஏத்தனம் | 2 | |
| | உரு | 10 | |
| | சரிமணி | 2 | |
| | | ------ | 15 |

| | | |
|---|---|---|
| கீழ்ப்பாகம்: | ஏத்தனம் | 3 |
| | உரு | 9 |
| | சரிமணி | 2 |
| இரண்டு பாகங்களையும் இணைத்து | கடமணி | 2 |
| | | ------ 16 |
| | ஆக | ---- |
| | | 31 |




தம்பி கழுத்து உருவில் அதன் பாகங்களை எப்படிக் கோர்ப்பார்கள் என்பதற்கான வரைபடத்தை மேலே தந்துள்ளேன்.

இந்தக் கழுத்து உருவில், குச்சி, தும்பு, துவாளை ஆகிய மூன்று உருப்படிகளும், ஒற்றைத் தும்பும் சேர்ந்து ஒன்றாக இணைந்து இருக்கும்.

இந்தக் கழுத்து உருவின் பாகங்களை நீ அறிவாய். ஏன் இப்படி இரண்டு பாகங்களாகக் கோர்த்து அணிய

வேண்டும் என்றுதெரிந்து கொள்ள வேண்டுமல்லவா? நம் சமூகத்தில் பெண் பருவமடை.யும் முன் திருவாதிரைப் புதுமை (இப்போது இந்த நிகழ்ச்சி நடைபெறுவதில்லை. இது பற்றிய விளக்கம் பின்பு எழுதுகிறேன்.) யின் போது கீழ்ப்பாகத்தில் உள்ள ஏத்தனம், உரு, சரிமணி, முதலியவைகளை மஞ்சள் கயிற்றில் கோர்த்து அணிவிப்பது வழக்கம். திருவாதிரைக் கழுத்து உரு என்றே அதற்குப் பெயர். பிறகு பெண் பருவமடைந்து, திருமணம் நடைபெறுகின்ற போது மேல் பாகத்தில் உள்ள உரு, சரிமணி, ஏத்தனம், கடமணி, திருமாங்கல்யம் முதலிய உருப்படிகளை இன்னொரு பாகத்தில் கோர்த்து மொத்தத்தில் கழுத்து உரு என்று கட்டுகிறோம். இதனால் தான் கழுத்து உருவில் இரண்டு பாகங்கள் ஏற்பட்டன. குச்சி, தும்பு துவாளை பற்றிய விளக்கம் முன்பே எழுதியுள்ளேன். கழுத்துருவில் நிறைய உருப்படிகள் இருப்பதினாலும், மிகுந்த கனமுடையதாக இருப்பதாலும் வாழ்க்கையில் தினசரி இதை அணிந்து கொண்டிருக்க முடியாது என்ற காரணத்தால் தினசரி உபயோகத்திற்கு "ஒற்றைத் தும்பை" பயன்படுத்தி வந்திருக்கிறார்கள். நாளடைவில் இந்த ஒற்றைத் தும்பிற்குப் பதிலாக இப்பொதெல்லாம் சிறு தாலியைத்தான் தினசரி உபயோகித்து வருகிறார்கள்.

தம்பி! இந்தக் கடிதத்தை முடிப்பதற்கு முன் முக்கியமான இரண்டு செய்திகளை எழுத விரும்புகிறேன். நாம் அறிந்தோ அறியாமலோ நம்முடைய திருமண நிகழ்ச்சிகளில் பலரும் பங்கு கொள்ளுகின்றனர். பல தொழிலாளிகள் பங்கு பெறுவதை மிகக் கவனமாகப் பார்த்தால் புலனாகும்.

திருமாங்கல்யம் செய்வதில் — பொற்கொல்லர்

கன்னி நீராடுதல் — நாவிதர்

முகூர்த்தக்கால் ஊன்றுவதில் — கொட்டகை போடுபவர்

மணை போடுவதில் — கொத்தனார்

மாற்றுக் கட்டுவதில் — சலவைத் தொழிலாளி

மஞ்சள் நீராடுவதில் — வைராவி

மணவறையில் — புரோகிதர்

இப்படி ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் ஒவ்வொரு தொழிலாளிக்கு முக்கியத்துவம் கொடுக்கப் பெற்றிருப்பதைப் பார்க்கும் போது, நம் ஒவ்வொருவருடைய வர்ழ்க்கையும் எல்லோருடனும் பின்னிப் பிணைந்திருக்க வேண்டும் என்ற நுண்ணிய கருத்துடன் ஏற்பாடு செய்து வைத்துள்ளனர் என்பதை அறியலாம். இன்னொரு செய்தி, நம் திருமண நிகழ்ச்சிகள் வட்டகைக்கு வட்டகை மாறுபட்டிருக்கின்றன என்பதே. அவைகளையும் விளக்கமாக எழுதுகிறேன்.

குன்றக்குடி மலைதான் செட்டி நாட்டிற்கு மையமான பகுதி. எனவே அதற்கு கிழக்கே, மேற்கே, தெற்கே உள்ள ஊர்களை முறையே கீழ் வட்டகை, மேல வட்டகை, தெற்கு வட்டகை என்ற பெயர்களால் அழைக்கின்றோம். வடக்கு வட்டகை என்ற ஒன்றில்லை. அது கீழ வட்டகையுடன் இணைந்து விட்டது. சில வட்டகைகளில் மாப்பிள்ளை அழைப்பின் போதும், பெண் அழைப்பின் போதும் மணமகனின் தாயார், மணமான சகோதரிகள் முதலியவர்கள் கழுத்து உருவை அணிந்து வருகிறார்கள். சில வட்டகைகளில் இந்தப் பழக்கம் மறைந்து விட்டது. சில பகுதிகளில் திருப்பூட்டும் போது மணமகன் மணையின் மீதும் மணமகள் கீழே தடுக்கின் மீதும் நிற்கின்றனர்.சில பகுதிகளில் மணமகள் மணையின் மீதும் மணமகன் கீழேயும் நிற்பதுண்டு. இன்னும் சில

பகுதிகளில் மணமக்கள் இருவரும் நடுவீட்டுக்குள் சென்று திருப்பூட்டுகின்ற நிகழ்ச்சி நடைபெறுகிறது.

பெண் அழைப்பின் போது சில பகுதிகளில் பெண்ணின் கையில் ஒரு சட்டியில் மஞ்சள், பாக்கு, தேங்காய் முதலியன கொடுத்து அழைத்து வருகிறார்கள். சில பகுதிகளில் இந்தப் பழக்கம் கிடையாது. தம்பி! பெரும்பாலும் திருமணச் சடங்குகளில் எந்தவிதமான மாற்றமும் இல்லை. எனினும் சிற்சில சிறிய மாறுதல்கள் அந்தந்த வட்டகைப் பழக்கவழக்கங்களைப் பொறுத்து அமைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

தம்பி! நம் இந்துக்களில் பல வகுப்பாரும் பல வகையான சடங்குகள் செய்து கொண்டு வந்தாலும் நமக்கும் அந்தணர் வகுப்பாருக்குமிடையே நடைபெறுகின்ற சடங்குகள் பற்றி இங்கு எழுதுவேன். என்னுடைய, முன் கடிதங்களில் நம்சடங்குகள் பற்றிய விளக்கங்கள் மிகுதியாக எழுதியிருப்பதால், அந்தண வகுப்பாருடைய திருமண விவரங்களை மட்டுமே கீழே தந்துள்ளேன். நகக்குறிக்குள் கொடுக்கப் பெற்றிருப்பவை அவர்களுடைய சடங்குகளுக்கு ஒப்பான நம்முடைய சடங்குகள் என்பதை அறிக.

சுமங்கலிப் பிரார்த்தனை (படைப்பு)

ஜானுவாசம் (மாப்பிள்ளை அழைப்பு)

விரதம், காசியாத்திரை, ஊஞ்சல்

திருமாங்கல்யதாரணம் (திருப்பூட்டுதல்)

அம்மி மிதித்து அருந்ததி பார்த்தல்.

நலங்கு, சேஷ ஹோமம் (மஞ்சள் நீராடுதல்)

ஆசீர்வாதம் (கும்பிட்டுக் கட்டிக்கொள்ளுதல்)

அந்தணர் வகுப்பாரிடையே ஐயர், வைணவர் என்ற பிரிவுகள் உண்டு. திருமண நிகழ்ச்சிகளில் அவரவர்கள் சார்ந்திருக்கின்ற மதத்தாலும் சாஸ்திரங்களாலும் சிற்சில மாற்றங்கள் இருக்கலாம்.

பிற என் அடுத்த கடிதத்தில்.

அன்புடன்

அண

**12**

அன்புள்ள எழில்!

நலம். நலமே விளைக!

என்னுடைய கடிதம் கிடைத்தது என்றும், நாம் என்னென்ன நிகழ்ச்சிகளை விட்டுவிட்டோம் என்று எழுதுவதற்கு முன், இப்போது நடைபெற்றுக் கொண்டு வரும் நம்முடைய திருமண நிகழ்ச்சிகள் என்னென்ன என்று எழுதும்படியும் கேட்டிருக்கிறாய். நீ விரும்பியபடி நிகழ்ச்சிகளை வரிசைக் கிரமமாகவும், திருமணத்திற்கு வேண்டிய பொருள்கள் எவையெவை என்றும் எழுதுகின்றேன். அதற்கு முன்பாக ஒரு சிறு விளக்கம்.

தம்பி! திருமணம் தொடங்கி, முழுமையடையும் வரை எந்த நிகழ்ச்சிக்குச் சென்றாலும், மணமக்களை வலது காலை முன் வைத்து நடக்கும்படி பெரியவர்கள் பக்கத்திலிருந்து நினைவூட்டுவார்கள். இது ஏன்? இதில் ஆழமான பொருள் உண்டு. வலம் என்றால் வலிமையுடையது என்று பொருள். வலிமையுடன் வாழ்க என்றும், யோக நிலையில் மூலாதாரம் இடமிருந்து வலம் செல்வதாலும், இறைவனை வலம் வருவது என்பதாலும், உலக வாழ்க்கையை அனுசரித்து நடக்க வேண்டும் என்ற எண்ணத்தை நினைவில் கொள்ள வேண்டும் என்பதாலேயே, மணமக்களை வலது காலை எடுத்து வைத்து வரும்படி பெரியவர்கள் நினைவு செய்வார்கள்.

நம்முடைய திருமணத்தில் பேசி முடித்துக் கொள்வதிலிருந்து நீச்சோறு சாப்பிட்டுவிட்டு வரும்வரை

எல்லாச் சடங்குகளின் போதும் சங்கு ஊதுவார்கள். இப்படிச் சங்கு முழங்குவது வேறு எந்தக் குலத்தாருடைய திருமண நிகழ்ச்சிகளிலும் இடம் பெறவில்லை. சில சமயங்களில் நம் சமூகத்தில் வேறு எந்த மங்கல ஒலியுமில்லாமல் சங்கு மட்டுமே ஒலிக்கின்ற நிலையில் சடங்குகள் நடைபெற்று வருவதை நீ கண்டிருக்கலாம். நகரத்தார் வாழ்க்கையில் சங்குக்கு முக்கியத்துவம் உண்டு. இதனைச் சிலப்பதிகாரத்தில்

"முரசெழுந்தன, முருடதிர்ந்தன, பணிகுலம் வெண்குடை
அரசெழுந்ததோர் படியெழுந்தன"

என்ற வரிகளால் குறிப்பிட்டிருப்பதைக் காண்க.

குடி அழைப்பு அழைத்துச் செல்லும் முன்பாக மணமக்களை மணமகளின் உறவினர்கள் வீட்டுக்குப் பால் பழம் சாப்பிட அழைத்துச் செல்வது உண்டு. மணமக்களை கிழக்கு முகமாக உட்கார வைத்து, ஒரு டம்ளரில் பாலும், வாழைப்பழமும் கொடுப்பார்கள். மணமகன் முதலில் கொஞ்சம் சாப்பிட்டபின், மீதியை மணமகள் சாப்பிட வேண்டும். மணநாளில் மணமக்கள் மிகுதியாக உணவு அருந்தி இருக்க முடியாமல் இருக்கக் கூடுமாதலால், அவர்கள் களைப்படைந்திருப்பார்கள். அந்தக் களைப்பினை நீக்குவதற்காக மட்டுமல்லாமல் பாதி பாதி பகிர்ந்துண்ணுவதால் அவர்களிடையே கூச்சமற்ற நெருக்கத்தையும், பிணைப்பையும் ஏற்படுத்திக் கொடுப்ப தற்கென்றே இதனைக் கருத வேண்டும். வாழ்விலும் தாழ்விலும் பங்கு கொள்வது என்பதே இதன் குறிப்பு.

திருமணத்தன்று மணமகள் வீட்டில் நீச்சோறு சாப்பிட்டு விட்டு, மணமகன் வீட்டுக்குத் திரும்பியதும் அன்று நல்ல நாளாக இருப்பதால், பெரும்பாலும் அன்று இரவே மணமக்களைத் தனி அறையில் துயிலச் செய்வார்கள். இதுவே முதல் இரவு.

தம்பி! இனி நம் திருமண நிகழ்ச்சி நிரலைக் காண்போம். பக்கத்தில் (நகக் குறிக்குள்) இந்தச் சடங்கினைச் செய்ய உரிமையுடையவர்கள் யார் என்பதையும் குறிப்பிட்டுள்ளேன்.

பேசி முடித்துக் கொள்ளுதல், கழுத்து உருவிற்குப் பொன் கொடுத்தல், முகூர்த்தக்கால் ஊன்றுதல், கல்யாணம் சொல்லுதல், பாக்கு வைத்தல் (பங்காளிகள் ஒருவர்), மணை போடுதல், அரசன் ஆணைக்கால் ஊன்றுதல், (பங்காளிகள்) மாற்றுக் கட்டுதல், பூரம் கழித்தல், மாப்பிள்ளை அழைப்பு, பகவத்யானம், காப்புக் கட்டுதல், (மாமக்காரர்) திருப்பூட்டுதல், திருப்பூட்டுகின்ற சடங்கு (மணமகனுக்கு தாய், சகோதரி, அல்லது இருவரும்) கல்யாண வேவு, மாம வேவு, மணவறை, கும்பிட்டுக் கட்டிக் கொள்ளுதல், சீராட்டுக் கொடுத்தல், மஞ்சள் நீராடுதல், காப்புக் கழற்றிக் கால் மோதிரம் இடுதல், நாணாளைச் சடங்கு, காப்பு அவிழ்த்தல், பால் பழம் சாப்பிடுதல், பெண் சொல்லிக் கொள்ளுதல், குடி அழைப்பு, பெண் அழைப்பு, மணமகன் வீட்டில் பால் பழம் சாப்பிடுதல், பால் பானை வேவு, ஸ்ரீதன உண்டியல் கொடுத்தல், நீச்சோறு சாப்பிடச் சென்று வருதல், முதல் வழி இரண்டாம் வழி சென்று வருதல், மணமக்களின் தாய் மாமன் வீட்டிற்கு சென்று காய்ச்சி ஊற்றிக் கொள்ளுதல்.

தம்பி! காய்ச்சி ஊற்றுக் கொள்ளுதல் என்பது, ஒரு குடும்பத்தில் சிறப்பான நிகழ்ச்சி ஒன்று நிறைவெய்தியதை முன்னிட்டு, இருகுடும்பத்தாரையும் பாராட்டி, அவர்களுடைய உறவினர்கள் (தாய் வழி பாட்டன் அல்லது மாமன்) கொடுக்கின்ற விருந்துதான்.

திருமணத்திற்குத் தேவையான பொருள்களையும் கூடுமானவரை கீழே தந்துள்ளேன். அளவு, அவரவர் தேவையைப் பொறுத்தது.

விரளி மஞ்சள். மஞ்சள்தூள், சந்தனம், பன்னீர், வெத்திலை பாக்கு, மலர்மாலை, தேங்காய், வாழைப்பழம், காப்புக்கட்டும் சிகப்புத்துணி, கால்ரூபாய் நாணயம், மாவிலை அரச இலை, கிளுவைக்கம்பு, பாலைக் குச்சி, மூங்கில் சுழி, பவளம், செங்கல், உமி, நிலை விளக்கு, சரவிளிக்கு, நெல், அரசாணி அமைக்கும் மேடை, அதன் அடுப்பு, முளைப்பாலிகைக் கிண்ணங்கள், கயிறு, ஸ்லேட்விளக்கு, பெரிய தாம்பாளம், முக்காலி, சட்டி, செம்பு, கெண்டிச்செம்பு, சடங்குத் தட்டு, படி, குழவி, கத்தரிக்காய், நவதானியம், குலம் வாழும் பிள்ளை, தவலைகள், எழுத்தாணி, வாழைஇலை, வள்ளுவப்பை, பாக்குச்சுருள், ஓலைக்கடாம், பச்சரிசி, நூல், மாமப்பட்டு, சங்கு, ஆலத்தித் தட்டு, விபூதித்தட்டு, இசைவு பிடிமானப் பத்திரம், மொய்ப்பண ஏடு, தடுக்கு, மணவறை விரிப்பு, முதலியன. அநேகமாக கூடுமானவரை எல்லாப் பொருட்களும் எழுதியிருக்கிறேன். திருமணத்திற்கு முதல் நாளே சரிபார்த்து சேகரித்து வைத்துக் கொள்ளவேண்டும்.

### பூரம் கழிக்கத் தேவையானவை :

நெல் படி 1, பச்சரிசி படி 1, உப்பு படி 1, தேங்காய் 1, வாழைப்பழம் 6, கத்தரிக்காய் 10, வெத்திலை பாக்கு, தடுக்கு, நிறை நாழி, வேப்பிலை, இரும்புச் சத்தகம் அல்லது சோத்து மாறு.

### மணவறைக்கும் பகவத்யானத்திற்கும் தேவையானவை :

அரைத்த மஞ்சள், பஷ்பம், பால் ஆழாக்கு, அரசங்குச்சி, நெல் அரை ஆழாக்கு, நூல் கண்டு, சிகப்புக்கரைத்துணி விரளி மஞ்சள் 2, நெல் படி 2, பச்சரிசி படி 2, தேங்காய் 6, வாழை இலை 10, சருவச்சட்டி 2, செம்பு 1, முக்காலி 2, பச்சை நெல், நல்லெண்ணெய், நெய், சூடம் முதலியன.

தம்பி! முதல் இரவு முடிந்த மறுநாள் காலை மங்கலப் பெண்டிர், கழுத்துருவில் குச்சி, தும்பு துவாளை மூன்றையும் கோர்த்து வைத்துவிடுவார்கள். இரண்டாம் வழி, மூன்றாம் வழி விருந்துகள் முடிந்ததும், கிழமைத் தோது பார்த்து மணமகன் காலில் உள்ள மிஞ்சியைக் கழட்டி விடுவார்கள். பின்னர் தாய் மாமன் வீடுகளில் சென்று காய்ச்சி ஊற்றிக் கொண்ட பின், சகஜமான தினசரி வாழ்க்கைக்கு மணமக்கள் வருவர்.

தம்பி! அநேகமாக திருமண நிகழ்ச்சிகள் அனைத்தும் எழுதிவிட்டேன். என்னுடைய கடைசிக் கடிதமான அடுத்த கடிதத்தில் நாம் நீக்கி விட்ட விசேஷங்கள், நிகழ்ச்சிகள் பற்றியும் இன்னும் சில செய்திகள் பற்றியும் எழுதுகிறேன்.

அன்புடன்

அண

## 13

அன்புள்ள எழில்!

நலம், நலமே விளைக!

என்னுடைய முன்னொரு கடிதத்தில் நம்முடைய திருமணங்கள் ஒன்பது நாட்கள் நடைபெற்றன என்றும் பிறகு காலத்தின் சூழ்நிலை கருதிப் படிப்படியாக 6,5,3,1, என்று நாட்களைச் சுருக்கிக் கொண்டு வந்ததால் சில நிகழ்ச்சிகளை நீக்கி விட்டோம் என எழுதியிருந்தேன். அவைகளைப் பற்றிய விளக்கங்களை நீ அறிந்து கொள்ள வேண்டும் என்பதற்காக இங்கே எழுதுகிறேன்.

தம்பி! எனக்கத் தெரிய ஏறத்தாழ 60, 70 ஆண்டுகட்கு முன் மணமகளுக்கு மணமகன் சென்று திருப்பூட்டிய தில்லை. வயதில் மிக மூத்தவரும் எல்லாப் பேறுகளும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்கின்றவருமான பெரியவர் ஒருவர்தான் மணமகன் சார்பில் சென்று திருப்பூட்டி வந்திருக்கிறார்கள். அப்போதெல்லாம் பெரும்பாலும் பால்யத் திருமணம் நடந்து கொண்டிருந்த நேரம். நவாப்புகளாலும், பாளையக்காரர்களாலும், அரசர்களாலும் இழைக்கப்பட்ட தீங்கிலிருந்து கன்னிப் பெண்களைக் காப்பாற்ற கையாண்ட உபாயம் இது. அந்தப் பெரியவருக்கு எல்லா மரியாதைகளும் செய்து, முறைகள் எல்லாம் செய்து, மேள வாத்தியங்களுடன் மணமகள் வீட்டுக்குச் சென்று திருப்பூட்டி வருவார். காலம் செல்லச்செல்ல இந்தப் பழக்கம் மாறி, இப்போது மணமகனே திருப்பூட்டும் வழக்கத்திற்கு வந்து விட்டது.

முன்பெல்லாம் திருமண நிகழ்ச்சிகளை நாளுக்கொன்று வீதம் நடத்தி வந்துள்ளனர். உள்ளூர் மணமகனாக இருந்தால், 'மாப்பிள்ளை அறிதல்' என்று ஒரு நிகழ்ச்சியும், பிறகு மணமகன் வீட்டார் இன்னின்ன பொருட்களைச் சீர்வரிசையாகத் தருகிறார்கள் என்பதை அறிவிக்கும் நிகழ்ச்சியாக 'சீர் வைத்தல்' என்றும், நம்முடைய, குலத்தொழிலை நினைவு செய்யும் பொருட்டும் மணமக்கள் வாழ்வு நலம் பெற்று அமையவேண்டும் என்பதை எடுத்துக் காட்டும் நிகழ்ச்சியாக 'உப்பு புளி வைத்தல்' என்றும், இன்ன தேதியில் திருமணத்தை வைத்துக்கொள்ளலாம் என்று பகிங்கரமாக ஊர் மக்களுக்கு அறிவிக்கும் நிகழ்ச்சியாக 'நாள் குறித்தல்' என்றும், மாப்பிள்ளை அழைப்பிற்குப் பிறகு மறுநாள் காலை மணமகனுக்கு முகச்சவரம் செய்து, அவனைத் திருமண வாழ்விற்குத் தருதியுள்ளவனா என்று அறிந்து கொள்ளும் நிகழ்ச்சியை 'கன்னி நீராடுதல்' என்றும், மாப்பிள்ளையினுடைய தனித்தன்மையைக் காட்டும் நிகழ்ச்சியாக, குதிரை ஏறுதல் என்றும், அப்படிக் குதிரை மீதேறி நகர்வலம் வரும் போது மணமகள் வீட்டிற்கு முன், பெண்கள் பலர் சேர்ந்து கொண்டு இவள்தான் உன் மனைவி என்று அறிமுகம் செய்கின்ற நிகழ்ச்சியை 'பெண் எடுக்கிக் காட்டுதல்' என்றும், (அப்போது மணமகளுக்குச் சகோதரர்கள் மணமகனை வரவேற்க பூ எறிந்து வந்திருக்கின்றனர்) காலத்தின் சூழ்நிலை கருதியும், எல்லாச் சடங்குகளையும் ஒரே நாளில் செய்ய இயலாது என்ற காரணத்தால் மேற்கூறிய நிகழ்ச்சிகளை இப்போது நிகழ்த்துவதில்லை.

இதேபோல நாம் முன்பு நடத்திவந்த சில விழாக்களையும் இப்போது நடத்துவதில்லை. அவையாவன:

**புதுமை:**

அரசனுக்குப் பிள்ளை பிறந்தபோது, கொண்டாடப் பெறும்விழா மகப்பேறு விழாவாகும். பெண் மகப்பேற்றைக் காட்டிலும், ஆண் மகப்பேறும் அதிலும் முதல் மகப்பேறு சிறப்பாகக் கொண்டாடப்பெறும், என்று 'பழந்தமிழராட்சி' என்ற நூலில் கூறப்பட்டுள்ளது. இங்ஙனம் நம்முடைய முதல் ஆண் அல்லது பெண் குழந்தைகளுக்குக் 'காப்புக் கட்டுப் புதுமை' என நிகழ்த்தி வந்திருக்கின்றோம்.

**கார்த்திகைப் புதுமை:**

பெற்றோர்கள், தங்களுக்குத் திருமண வயதுடைய ஆண் மக்கள் இருக்கின்றனர் என்பதை சுற்றத்தார்க்கு தெரிவிக்கின்ற நிகழ்ச்சியே 'கார்த்திகைப் புதுமை' என்ற பெயரால் நடைபெற்று வந்துள்ளது. இது கார்த்திகை மாதம் கார்த்திகை நட்சத்திரத்தன்று நடைபெறும். இதனைச் சூப்பிடி என்றும் கூறுவார்கள்.

**திருவாதிரைப் புதுமை**

'பெண் திலகமான ஆதிரை என்பவள் மணிமேகலையில் குறிப்பிடப் பெறுகிறாள். இவளும் நம் நகரத்தார் மரபினளே. இந்த திருவாதிரை என்பது வயது வந்த பெண்பாலர்க்கு திருமணமாகு முன்னர் மார்கழி மாதம் திருவாதிரை நட்சத்திரத்தில் நடைபெறும். திருமணத்திற்கு உரிய பருவம் அடைந்த பெண்களை விளம்பரம் செய்யும் நிகழ்ச்சியாக திருவாதிரை அமைந்திருக்க வேண்டும்.

மணிமேகலை வணிகர் குலக் கோவலன் மகளே, அவளுக்கு அமுதிட்ட ஆதிரையும் அக்குலத்தவளே. மணிமேகலையில் உயர்ந்தவள் என்றும் கருதப்பட்டவள். தம் குலத்து மகளிர் எல்லாம் அவள் போல விளங்க வேண்டும் என்பதே இவ்விழாவின் நோக்கமாகும்:

மணிமேகலை பாத்திரம் பெற்றவுடன், ஒரு பத்தினிப் பெண்ணிடம் பிச்சை பெறவேண்டும் என்ற நியதிப்படி ஆதிரை என்பவளிடம் பிச்சை கேட்டாள், "பாரத மடங்கிலும் பசிப்பிணி யறுக" எனச் சொல்லி அவளிட்ட பிச்சை, பெருகி உலகப்பசிப்பிணியைப் போக்கிற்று. இதைக் கருத்தில் கொண்டுதான் திருவாதிரை விழாவின் போது மகளிர் வீடுவீடாகச் சென்று

"ஆடி ஆடி வாரோம் அவரக்காய் போடுங்க
பாடிப் பாடி வாரோம் பாகற்காய் போடுங்க
கூடிக்கூடி வாரோம் கொத்தவரங்காய் போடுங்க"

என்று உண்ணும் பொருட்களையே விரும்பிக் கேட்டு வந்திருக்கின்றனர் என்று 'சோமலெ" அவர்கள் எழுதியுள்ள 'செட்டி நாடும் தமிழும்' என்ற நூலில் குறிப்பிட்டிருப்பதை இங்கு நினைவு செய்கிறேன். இப்படி வீடுவீடாகச் செல்லும்போது நல்ல ஆடை அணிமணிகளும்,, திருவாதிரைக் கழுத்து உருவையும் அணிந்து கொள்வர்.

## உபதேசப் புதுமை:

பஞ்சாட்சர உபதேசம் பெற்றுக் கொள்வது என்பது தொன்று தொட்டு நகரத்தார்களிடம் இருந்து வரும் சிறந்த பழக்கமாகும். இதனைத்தான் உபதேசம் என்று சொல்கிறோம். உபதேசம் கேட்டுக்கொண்டதை முன்பெல்லாம் உபதேசப் புதுமை என்றே ஐந்து நாட்கள் ஒரு விழாவாகக் கொண்டாடி வந்திருப்பதாக தொண்ணூற் றாரூர் நகரக் கூட்டத் தீர்மானங்களிலிருந்து அறிய முடிகிறது.

சைவ சாதனங்களாகிய திருநீறு, உருத்திராக்கம், ஸ்ரீபஞ்சாட்சரம் ஆகியவற்றை நாம் கைக்கொள்வதற்குரிய தகுதி, நமக்கு சிவதீட்சையினாலேயே வருவதாகும்.

"துஞ்சிருள் காலைமாலை தொடர்ச்சியை மறந்திடாதே
அஞ்செழுத் தோதின் நாளும் அரனடிக்கு அன்பதாகும்"

என்று அப்பர் அடிகளும்

"வேத நான்கிலும் மெய்ப் பொருளாவது
நாதன் நாமம் நமச்சிவாயவே"

என்று சம்பந்தப் பெருமானும் தேவாரங்களில் பாடியிருப்பதை அறிக. உடலைத் தூய்மை செய்து கொள்ள நீராடுவதைப் போல, உள்ளத்தைத் தூய்மை செய்துகொள்ள பஞ்சாட்சரத்தை ஜெபம் செய்யவேண்டும். முற்காலப் பழக்கப்படி ஏழாம் ஆண்டு முதல் ஒன்பதாம் ஆண்டுக்குள் சமய தீட்சியைப் பெற்றுச் சாதகர்களாய் நம் முன்னோர்கள் வாழ்ந்திருந்தனர். பின்னர் உபதேசம் என்னும் பெயருடன் உருமாற்றமும் செயல் மாற்றமும் பெற்றுத் தோன்றிய சமய தீட்சை கூட, இப்போது திருமணத்திற்குப் பின்னர் தான் கேட்டுக்கொள்கின்ற நிலை வந்துவிட்டதை அறிக.

தம்பி! மிகப் பொறுமையுடனும், கவனத்துடனும் என் கடிதங்களைப் படித்து வந்ததற்கு நன்றி. நம் இளைய தலைமுறையினர், திருமண நிகழ்ச்சிகளைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்றுதான் இவ்வளவு விரிவாக, விளக்கமாக எழுதி வந்தேன். காலமில்லாமையால் பல நிகழ்ச்சிகளைக் கடைப்பிடிக்கவில்லை என்றாலும், நான் குறிப்பிட்டுள்ள நிகழ்ச்சிகளெல்லாம் கட்டாயமாக நடைபெறவே வேண்டும்.

மணமக்கள் எல்லா நலன்களும் பெற்றுப் பல்லாண்டு வாழ்கவென இறையருளைச் சிந்தித்து வாழ்த்துகின்றேன்.

அன்புடன்

அண

**இந்நூல் உருவாவதற்கு எனக்குத் துணை செய்த மற்ற நூல்கள்.**

1. திரு. மு. ராம. ராமநாதன் செட்டியார் அவர்கள் பதிப்பித்து, பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியார் அவர்கள் எழுதிய "நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு."
2. "தேவகோட்டை நற்குண சீலன் அல்லது கரு. சா. வெ. சுப. ராமநாதன் செட்டியார் சரிதம்" ஆசிரியர் புரசை ஏகாம்பர முதலியார்.
3. தொல்காப்பியம்.
4. சிலப்பதிகாரம்.
5. அகநானூறு.
6. கலைக்களஞ்சியம்.
7. மகாகவி பாடுவார் முத்தப்ப செட்டியாரவர்களின் 'திருமுக விலாசம்'
8. "சோமலெ" அவர்களின் 'செட்டி நாடும் தமிழும்'
9. இந்து திருமணச் சட்டம்
10. தமிழர் திருமணம்

இவை தவிர

நகரத்தார்கள், அதிலும் குறிப்பாக ஆச்சிமார்கள், வேத விற்பன்னர்கள் முதலியோர்களுடன் நேரடி உரையாடல்.



